*Kumaraṉ*

*Āram 9, muttu 39*

*May 12, 1932*

Record no. 313

NO. M. 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY.

...ரப் பதிப்பு.
...ந்தா விவரம்.
...காடு வருஷம்
...றுக்கு ரூ. 5-0-0
... மாதம் 3-0-0
...வெளிநாடு வருஷம்
...ன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

மாதப் பதிப்பு.
சந்தா விவரம்.
உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 1-4-0
ஆடிமீ வருஷம்
ஆரம்பம்.

வியாழன்தோறும் வெளிவரும்.

...ரம் 9. காரைக்குடி, ஆங்கிரச-ஹு சித்திரை-மீ ௩௦-உ (12—5—32.) முத்து 39.

## பிசாசு கொலை செய்யுமா?

### பல்ஜியத்தில் அதிசய சம்பவம்.

### 10 வருடங்கட்குப் பின் பழிக்குப் பழி.

...ரமான வழக்கு.

...நாகப்பூரில், ஸர். தேஜ்பகதூர்சாப்ரூ ...க்கிலாகத் தீர்மானித்த ஒரு ...மான வழக்கு நடைபெற்றது. ...தனை விசாரித்த அடிஷனல் ஜுடி...யல் கமிஷனர்கள் இரண்டு ஜமீந் ...ளை விடுதலைசெய்து விட்டார்கள். ...வ்விரு ஜமீந்தார்களாலும் ஸ்லாவதி ...ன்ற அவர்களுடைய சகோதரியா... ஒருபெண் கொலை செய்யப்பட் ...ள். கொலையாளியாக இருந்தவர் ...பாலகிருஷ்ணன் என்ற ஒரு கம்பௌ...டராம். இவர் நேரடியாக கொலை செய்யாது விஷத்திராவக மொன்றை ...டம்பில் குத்தி ஏற்றிவிட்டார். இத் ...கைய கொலைக்குக் காரணம் அவள் ...யவொழுக்கத்தைக் கொண்டாளெ...பதாம்.

ஜட்ஜ்மெண்டு விடுத்த கமிஷனர் ...ள் அடியில் வருமாறு குறிப்பிட் ...டார்கள்:—

இந்தவழக்கு அசாதாரணமு மாச்ச...ரியமானது மாகும். கொலை செய்யப்ப...ட்டவழியும், அதற்கான காரணமும் ...விசேஷமானதே. இவற்றைவிட அதி...சயமானவை, கீழ்கோர்ட்டில் பலர் பொய்சாட்சி சொல்லி குற்றவாளிக...ட்கு சாதகமாக விருந்தார்களென்ப...தாம், பலர் பொய் சொல்லிய ஏது...வால் நமக்கு உண்மையைக் கண்டு பிடிக்க மிகவும் கஷ்டமடைய வேண்...டியதாயிற்று.

"விசாரணையின் போது இருதரப் பாரும் ஒருவரை யொருவர் குறை சொல்லிக் கொண்டும், ஒருவருக்கெதி...ராக இன்னொருவர் சாட்சிகள் தயாரி...த்துக் கொண்டு மிருந்தார்கள். இத்தகைய செய்கை உண்மை இன்...னும் கொஞ்சதூரத்தில் மறைத்து விட்டது. சாட்சியங்களை யெல்லாம் ஒன்றுய் சேர்த்துப் பார்க்கும் போது கொலை செய்த நிகழ்ச்சி பாலகிருஷ்ண...னைத் தவிரவேறு எவருக்கும் தெரி...யாது என்று தோற்றுகிறது. பற்பல விதமான பேச்சுகள் அரண்மனையில் நடந்து கொண்டிருந்ததைக் கேட்ட சாட்சிகள் பலர் வந்த போதிலும் கொலை விஷயம் எவருக்கும் தெரியா...மலிருந்ததாகத் தெரிகிறது. ஆனால் கடைசியில் கொலை விஷயம் எல்லோருடைய அறிவுக்கும் எட்டி அது ஒரு கதை யுருவமடைந்து விட்டது."

இவ்வண்ணம் குறிப்பிடுகின்ற கமிஷனர்கள் இறுதியில் மேற்படி கொலைநடைபெற்றிருக்கக் கூடுமென்று நம்புவதற்கான இலட்சியங்களிருந்தபோதிலும் அது உண்மையென்று நிரூபிப்பதற்கான முகாந்திரங்களில்லாததால் வழக்கைத் தள்ளி யிருப்பதாக முடிவு கூறினர்கள்.

---

## கிராமபோனில் மனோவசியம்.

கிராமபோன் வழியாக மனோவசியம் (Hypnotism) செய்வது தற்போது கண்டுபிடிக்கப் பட்டிருக்கும் ஒரு புதுமையாகும். இத்தகைய புதிய இயந்திரத்தைக் கண்டு பிடித்தவர் பர்லின் வாசியாகிய டாக்டர் காஸிமிர் ராத்வான் என்பவராம். அவரை சைக்கோலோனி என்று அழைத்து வருகிறார்கள். இவ்வியந்திரத்தை முதன் முதல் பரிசோதனை செய்த போது உடனிருந்த ஒரு டாக்டர் இங்ஙனம் எழுதுகின்றார்:—

"ஊக்கமும் பலமும் அழுத்தமுமுடைய கனத்த குரலோசைகள் கிராமபோன் ரிக்கார்டுகளில் எடுக்கப் படுகின்றன. எனவே ஒவ்வொருவர் வீட்டிலும் ஒரு ஹிப்னுட்டைசர் (மனோவசிய வல்லுநன்) ஏற்படுகின்றான். இந்த கிராமபோன் பிளேட்டுகளின் முன்பு ஒரு நோயாளிவைக்கப்படுகின்றான். ப்ளேட்டிலிருந்து வெளிவருகின்ற இனிய அழுத்தமான சப்தம் அவன் நிலைமையை அபிவிருத்திப் படுத்துகின்றது.

நோயாளி தொழில் கொடுமையால் தொந்தரவு செய்யப்பட்டவனாகவோ, கவலை கொண்டவனாகவோ, நரம்புத் தளர்ச்சி யுடையவனாகவோ இருந்தால் கிராமபோன் இசையைப் பருகியதும் திடப்படுகின்றான். தொழிலால் குழப்பமடைந்தவன் இசை காதில் விழுந்ததும் எதனையும் மறந்து விடுகிறான். இன்னும் கொஞ்சம் அவனுக்கு அவ்விசையளிக்கபடுமானால் அவன் தூக்கம் கொள்ளத் தொடங்குவதோடு கனவும் காணத் தொடங்குகின்றான்.

மேற்படி பிளேட்டுகளைக் கேட்டுக் கொண்டிருந்த பலருடைய இருதயம் 100 நிமிஷத்தில் 70 தரம் அடித்தைவிட்டு 86 தரம் அடிக்கத்தொடங்கியதையும் அப்பால் 69 தடவையாகக்குறைந்ததையும் பார்த்தேன். ஆரோக்கியமான சரீரமுடையவர்கட்கு டாக்டர் ராத்வான் மூன்று பிளேட்டுகள் வைத்திருக்கின்றார். அவற்றை காலை, நண்பகல், மாலையாகிய நேரங்களில் முறையே ஒலிக்கச்செய்து அவர்கள் கேட்கும்படிச் செய்கின்றார். இது சற்றேறக்குறைய மூன்று வேளை மருந்து கொடுப்பதற்குச் சமமாகின்றது.

இதே போன்று கலக்கமான மனமுடையவர்கட்கும் விசேஷ மனப்பான்மை யுடையவர்கட்கும் அவரவர்கட்குத் தகுந்தபடியான பிளேட்டுகளை வைத்திருக்கிறார்.

இந்த முறை எனக்கு மிகவும் சிறப்புடையதாகத் தோன்றுகிறது. பேசும் சினிமாக்களில் டாக்டர் ராத்வானுடைய முறையை புகுத்தினுல் பலருக்கு எளிதில் வைத்திய சிகிச்சை கொடுக்கலாம்.

ஆகவே அரசாங்கம் தலையிட்டு நடத்தத் தொடங்க வேண்டும்."

---

## பிசாசு கொலை செய்யுமா?

இங்கிலாந்து முழுதும் பிசாசினுல் கொலைசெய்ய முடியுமா என்ற கேள்வி நிரந்தரமாகக் கேட்கப் பட்டுவருகிறது. அக்கேள்வி ஜார்ஜஸ் ஆர்ன்ஸ்டு என்ற ஒரு பிரபல சங்கீத போதகரின் மரணத்தின் பின்னெழுந்ததாகும். ஆர்ன்ஸ்டு ஒருநாள் இறக்கும் நிலையில் தன் படுக்கையில் கிடந்தார். அவரையணுகிக் கேட்டபோது பிசாசினுல் தான் கொலைசெய்யப் பட்டதாகச் சொன்னர். அவ்வாக்குமூலத்தால் தெரிவது அடியில் வருமாறு:—

ஆர்ன்ஸ்டு 10 வருடங்கட்கு முன்பு பல்ஜியத்திலுள்ள ஒரு மங்கையிடம் காதல் கொண்டார். அம்மங்கை அபாரமான அழகும் வசீகரமும் நிறைந்திருந்ததோடு நன்றாக சங்கீதத் தேர்ச்சியுமுடைய வளாயிருந்தாள். ஆதலால் அவளிடம் பல சங்கீத வித்வான்கள் வந்து காதல்புரியலானர்கள். அவ்வாறு வந்தவர்களில் ஒருவரே ஜயார்ஜஸ் ஆர்ன்ஸ்டும். இவர் எவ்வளவோ முயன்றும் மரியானி துல்லியர் என்ற அம்மங்கை ஏற்றுக்கொள்ள வில்லையாம். அப்படியிருக்க ஒருநாள் அவள் மூச்சுத்திணறி தன் அறையில் இறந்துகிடந்தாள். அவளை ஆர்ன்ஸ்டே கொன்றிருக்க வேண்டுமென்று எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் அவர் ஒப்புக்கொள்ள வில்லை. ஆனால் கடைசியில் அவரிறக்கும்போது உண்மையைப் யொப்புக் [illegible]. மேலும் [illegible]:—

நான் துல்லியரைக் கொலை செய்த அன்று முதல், தினசரி அவளுடைய ஆவி வந்து என்னைத் துன்புறுத்திக் கொண்டிருந்தது. ஆகவே நான் பல்ஜியத்தைவிட்டு இங்கிலாந்துக்கு ஓடி வந்து விட்டேன். ஆனால் அந்த ஆவி அங்கு கூடவும் என்னைத் தொடர்ந்து வந்து பயங்காட்டியது. ஒரு நாள் நான் ஷெப்பர்ட்ஸ் புஷ் என்ற எனது ஜாகையிலிருந்தபோது அந்த ஆவி வந்து என்னை வெருட்டியது. உடனே நான் பயந்து கூச்சலிட பலர்வந்து கூடி என்னை ரட்சித்தார்கள். அதன்பின் வெட்கி நான் பல்ஜியத்துக்கே போய்விட்டேன். அங்கும் அப்பேய் வந்து பழிக்குப்பழிவாங்கிவிடுவதாகக் கூறிற்று.

ஆர்ன்ஸ்டு இன்றும் கூறுவதாவது:-

நான் தூங்கிக் கொண்டிருந்தேன். திடீரென்று என்முன் ஒரு வெண்மை நிறமான உருவம் தோன்றியது. நான் பயந்து ஓடினேன். அது விடாது தொடர்ந்து வந்து கழுத்தைப்பிடித்தமுத்தியது. நான் விழுந்தேன்.

இந்தக்கூற்று எவ்வளவு தூரம் மெய்யென்பது அறியக் கூடவில்லை; ஆயினும் ஜனங்கள் பரபரப்புடன் பேசிக் கொள்கிறார்கள்.

---

## இதழுக்குள் நோட்டு.

மிடில் பரோவில் ஒரு தோட்டக்காரன் தனது தோட்டத்திலிருந்து ஒரு முட்டைக்கோஸை ஒடித்து அதன் இதழ்களைவிரித்தான். உள்ளே 10 ஷில்லிங் நோட்டொன்று இருந்தது. அத் தோட்டம் பொது ரஸ்தாவின் பக்கத்திலிருப்பதால், சாலையில் தவறிவிழுந்த நோட்டு காற்றில் அடித்துக் கொண்டுபோய் கோஸுக்குள் அகப்பட்டிருக்கக் கூடுமென யூகிக்கின்றனர்.

## பொறுக்கு மணிகள்.

அட்லாண்டிக் சமுத்திரத்தின் விஸ்தீரணம் 30,000,000 சதுர மைல் எனக் கணக்கிட்டிருக்கின்றனர்.

0 0 0

பூமி, உருண்டை வடிவமாக 8,000 மைல் குறுக்களவும், 25,000 மைல் சுற்றளவுமுள்ளதாம்.

0 0 0

ஆப்ரிக்காவிலுள்ள காட்டு எலிகள், நீர் முதலிய பானங்களையே குடிப்பதில்லையாம்.

0 0 0

நிலத்தைத் தோண்டிக்கொண்டே சென்றால், 50 அடி ஆளத்திற்கு 1 டிக்ரி வீதம் உஷ்ணம் அதிகரித்திருக்குமாம்.

0 0 0

நகர்பூர், இலாகின் முதலிய கிராமங்களில் பெய்த மழையுடன் விழுந்த ஆலங்கட்டிகள் ஒவ்வொன்றும் ஒரு பவுண்டுநிறையுள்ளதாயிருந்தனவாம்.

0 0 0

மாகி என்ற பெயருள்ள ஒரு லண்டன் குதிரை தான் உலகத்திலேயே மிகவும் பழைமையான குதிரையாம். அது 20 ஆயிரம் வட்டம் சுற்றியிருக்கிறதாம்.

0 0 0

போர்டோரிகோ நாட்டில், கரும்பு மூன்றுமுறை பயிர் செய்யப்படுகின்றது. முதன்முறையில் பயிர் செய்யப்படுவதை 18 மாதங்களுக்குப் பின் அறுவடை செய்கின்றனர்.

0 0 0

எப். எம். எஸ். ரயில்வேயில் சுமார் 23½ கோடி ரிங்கிமுதல்முடக்கப்பட்டிருக்கிறது. அதன் வருஷச் செலவு 1கோடி. ரோடுகளில் முடக்கப்பட்டிருக்கும் மொத்தமுதல் 10½ கோடி.

0 0 0

இன்னிசை, ஆத்மாவினுள் சென்று மனதைச் சாந்தப்படுத்தி, மகிழ்ச்சியைத் தோற்றுவிக்கும் வல்லமையுடையதால், எவ்வித நோயையும் குணமாக்குமாம்.

0 0 0

சுமத்ராவில் ஒரு பாகத்தில் சாகுபடி செய்வதற்கு பெண்கள் நெல்மணிகளை விதைக்கும்போது, பயிர்கள் தம் கூந்தலைப் போல் நீண்டுவளர வேண்டுமென்னும் நம்பிக்கையுடன், தலைமயிரை அவிழ்த்துத் தொங்கவிட்டுக் கொள்ளுகிறார்கள்.

0 0 0

உலகத்தில் சுமார் ஐந்து லட்சம் கிருமிகளிருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருப்பினும், இவற்றுள் நோய்களைப் பரவச் செய்பவை சுமார் அறுபதுவகை கிருமிகள் தானென்று இது வரை தீர்மானிக்கப் பட்டிருக்கின்றது.

0 0 0

சுவிட்ஜர்லாந்திலுள்ள ஜூரிச் ரசாயன ஆராய்ச்சி சாலையிலுள்ள கடிகாரமொன்றுக்கு ஒருபோதும் சாவிகொடுப்பதில்லை. ஆயினும் அதிலிருக்கும் இயந்திரம் சீதோஷ்ண நிலைமையில் இரண்டு டிக்கிரி ஏறிக்குறையும் போதெல்லாம் புதிய சக்தி வகித்து வேலை செய்வதற்குத் தயாராகின்றது.

0 0 0

பாலஸ்தீனத்தில் அத்லிட்டுக்குச் சமீபத்தில் ஆங்கிலோ அமெரிக்கக் கோஷ்டியினர் சுரங்கங்களை வெட்டி ஆராய்ச்சி செய்ததில் வயதான முஸ்திரியர் மூவருடைய எலும்புக்கூடுகள் கண்டெடுக்கப்பட்டன. அவை 75 ஆயிரம் வருஷப் பழக்கமுடையவையென்று கணக்கிடப்படுகின்றது.

0 0 0

கேம்பிரிட்ஜ் கேவண்டிஷ் ரசாயன சாலையில் ஆராய்ச்சி செய்துவரும், 34 வயதுடைய டாக்டர், ஜே. டி. காக்ராப்ட்என்பவரும், 30 வயதுடையடாக்டர் டி. வெஸ்டன் என்பவரும் 'அணு'வைப் பல அணுக்களாகப்பிரிப்பதில் வெற்றி யடைந்திருக்கின்றனராம்.

## மிருகங்களும் பகுத்தறிவும்.

மனிதர் தங்களை எல்லா ஜீவராசிகளினும் மேலானவர் என்றும் அதற்கான காரணம் பகுத்தறிவு பெற்றிருப்பதுவேயென்றும் பேசிப் பெருமை பாராட்டிக்கொள்கிறார்கள். நன்னூலாரும் "மக்கள் தாமே ஆறறிவுயிரே" என்ற பாட்டினால் அக்கூற்றை விளக்குகின்றார்.

ஆனால் உண்மையை ஆராய்ச்சி செய்து பார்த்தால் பற்பல பிராணிகள் பகுத்தறிவினால் மனிதனைவிட மிகவும் மேம்பட்டிருக்கின்றனவென்பது புலனாகும். எறும்புகட்குள் காணப்படுகின்ற ஒத்துழைப்பும் சகோதர வாஞ்சையும் கடுமையான உழைப்பும் எந்த மக்களிடம் காணக்கூடும்? நாய்கள் காட்டுகின்ற நன்றிக்கு இணையாக மனித உலகில் எதனைக் கூறக்கூடும்? ஒரு பொருள் கிடைத்தால் தம் இனத்தை முழுதும் அழைத்துப் பங்கிட்டுண்கின்ற காகங்கட்கு ஈடாக எந்த மனிதனைச்சொல்ல முடியும்? ஒரு பசு கருப்பம் என்று தனது மோப்பத்தால் உணர்ந்து கொண்டதும் 10 மைல் ஓடிப்போய் விடுகின்ற எருதுகளுக் கொப்பாக எந்த மனிதனையேனும் கூறவியலுமோ? தன் யஜமானன் என்னமாதிரி வேடம் புனைந்து கரைந்து நடந்தாலும் பகுத்தறிந்துவிடுகின்ற நாயின் தன்மைக்கு எந்த துப்பறியும் புத்திசாலி இணையாவான்? தம் மனைவியையன்றி பிற பெண்கள் முகம் பாராத பட்சிஜாலங்கள் எத்தனை எத்தனை? இன்னும் இங்ஙனமே இயற்கையை எடுத்தாராய்ந்து மனிதனின் "குறும்பு" நிறைந்த புத்தியையொழித்துப் பார்ப்பதானால் பலபல ஜந்துக்கள் பகுத்தறிவு மேம்பட்டிருக்கின்றனவென்று காணலாம். அதற்கான் ஒன்றிரண்டுதாரணங்களைக் கீழே தருகின்றோம்.

பிராணிகளைப் பற்றிய நூல் வல்லார்களில் டார்வின் (Darwin) ஓர் பிரபல சாஸ்திர நிபுணர். அவர் எழுதிய புஸ்தகங்களில் முக்கியமானது "The Descent of man" அல்லது மனிதன் தோன்றிய மார்க்கம். அப்புத்தகத்தில் பகுத்தறிவைப் பற்றிச் சொல்லும்போது, அவர் பார்த்த மீனொன்று தன் கண்ணாடிக் கூட்டிலிருந்து, பக்கத்திலிருந்த கூட்டிலுள்ள மீன்களை யெல்லாம் கொல்ல யத்தனித்துத் தாவிய போது, கண்ணாடியில் அடிக்கடி மோதிக்கொள்ளவே, பயனற்றுப் போனமைகண்டு வாளாயிருந்துவிட்டது. மூன்றுமாதங்களுக்குப் பின் அக் கண்ணாடி மூடியையெடுத்து விட்டபிறகும் மற்ற மீன்களிருக்கும் பக்கமாகச் செல்வதை அம் மீன் நிறுத்திவிட்டது. அதுபோலவே ஓர் பாம்பு வேலி வழியாக தலையை விட்டு தவளைகளைப் பிடித்துத் தின்ற பிறகு, தலையை மீண்டும் எடுக்கமுடியாமல் இரையைக் கக்கும்படி நேரிடுதலைக் கண்டு, மூன்றாந்தரம் சாமர்த்தியமாக தவளையின் காலைப் பற்றி தன் பொந்திட மிழுத்துக் கொண்டு தின்ன ஆரம்பித்தது. இவை பகுத்தறிவா லல்லவா?

டார்வினைப் போல ரெங்கர் (Rengger) என்பவரும் ஒரு ஜெர்மனிய சாஸ்திர நிபுணர். அவர் அநேக குரங்குகளை வளர்த்து அவைகளின் தன்மைகளைப் பற்றி புஸ்தகங்கள் எழுதியுள்ளார். அக் குரங்குகளுக்கு முட்டைகளைக் கொடுக்கும் போதெல்லாம் அக் குரங்குகள், அம் முட்டைகளை உடைக்க வழிதெரியாமல் கல்லிலடித்து நாசமாக்கின. ஆனால் இரண்டொரு நாள் இவ்வாறு முட்டைகள் வீணாதலைக் கண்ட அக்குரங்குகள் முட்டைகளின் மேல் பாகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக உடைத்துக் குடிக்கஆரம்பித்தன. இன்னும் சர்க்கரை யுருண்டைகளில் வண்டுகளை, வைத்துக் கொடுக்கவே, வண்டுகளால் கொட்டுண்டமையால் அவைகளைத் திறக்கப் பயந்து காதில் வைத்து குரங்குகள் முதலில் ஆட்டிப் பார்த்தன. தென்னாப்ரிக்காவில் ராணுவத் தலைவனா யிருந்த ஸ்மித் (Sir Andrew Smith) என்பவர், தான் வளர்த்து வந்த பபூன் குரங்கைத் தன் சேவகன் சேஷ்டை செய்து வரவும், ஒருநாள் அக் குரங்கு அச் சேஷ்டைகளைப் பொறுக்க முடியாமல், மண்ணைத் தோண்டி, தண்ணீரையூற்றி, அதனால் அவனை அக் குரங்கு அடிக்க ஆரம்பித்ததைக் கவனித்து எழுதி யிருக்கிறார்.

பெண் குரங்குகள் சிறு குட்டிகளின் மீது உட்காரும் ஈக்களை ஓட்டுகின்றன. அவைகளில் ஆண் பெண் இரண்டும் அநாதையான குரங்குக் குட்டிகளை யெடுத்து வளர்ப்பதும் குரங்குகளின் சாதாரண குணம். பிரஹம் (Brehm) என்ற நிபுணர் வளர்த்து வந்த குரங்கானது தன்னுடன் விளையாடிக் கொண்டிருந்த பூனைக் குட்டியின் நகங்களை அபாயமென்று கடித்து விட்டதை ஆச்சர்யத்துடன் எழுதி யிருக்கிறார்.

இவ்விதமான புத்தி சாதுர்யக் குணத்தையும் தவிர, மற்று மநேக குணங்கள், மிருகங்களுக்கு மனிதனைப் போல உண்டு. டார்வின், நாய்கள், பூனைகள், பறவைகள், குரங்குகள் முதலியவை கனவு காண்பதாகவும், அப்போது அவை ஒரு புது மாதிரியாகக் கத்துவதாவுகம், அக்கனவுகள் அப் பிராணிகள் யோசனை செய்கிறதா லுண்டாகிறதாகவும் சொல்லுகிறார். இதற்கு உதாரணமாக ஹச்சிஸன் (Colonel Hutchison) என்பவர் தான் வளர்த்து வந்த வேட்டை நாய், தண்ணீரில் விழுந்த வாத்துகள், இரண்டையும் ஒரே சமயத்தில் இழுத்து வர முடியாமல், ஒன்றைக் கொன்று விட்டு மற்றொன்றை மாத்திரம் உயிருடன் காப்பாற்றிய பின்பு, செத்த வாத்தைக் கொண்டு வரச் சென்றதாகவும் எழுதியிருக்கிறார்,

மிருகங்களில் மிகுதியான புத்தி நிஷ்டைய முடையவை யானைகளென்று நாம் சிறு வயதிலேயே, யானையும் தையல்காரனும் என்ற கதையில் படித்திருக்கிறோம். பழகிய யானைகள் காட்டு யானைகளைப் பிடிப்பதற்குச் செல்லும் போது, நாம் இன்ன விஷயத்திற்காகப் போகிறோமென்பதும் அவைகளுக்குத் தெரியும். இன்னும் இந்திய நாட்டு யானைகள், மரக்கிளைகளை யொடித்து, தம் மேலுட்காரும் ஈக்களை ஓட்டிக் கொள்ளுகின்றன. மிருகங்களுக்குத் தம்முடைய சாமானென்றும், தம்முடையதல்லவென்றும் தெரிந்து கொள்ளுகின்றன. நாய்கள் தம் எலும்புகளையும், பக்ஷிகள் தம் கூடுகளையும் காப்பாற்றிக் கொள்ளுகின்றன. லண்டன் நகரத்திலுள்ள உயிர் காட்சி சாலையில் குரங்கொன்று தன் பல் வலுவற்றிருந்தமையால் ஒரு கல்லைக் கொண்டு தனக்குக் கிடைக்கும் கொட்டைகளை யுடைத்துத் தின்று விட்டு, அக்கல்லை மறுநாள் உபயோகிப்பதற்காக, வைக்கோலில் ஒளித்து வைத்து வந்ததாம். பபூன் குரங்குகள், சூரியனுடைய உஷ்ணம் பொறுக்காமல் கோரைப்

(12 ம் பக்கம் பார்க்க.)

## விகடத் துணுக்குகள்.

ஒரு நாடக நடிகரிடம் ஒருவர் சென்று நீண்டநேரம் பேசிவிட்டு அவருடைய வருமான மெவ்வளவு என்று கேட்டார். நடிகர் ஒருவாரத்திலேயே நூற்றுக்கணக்காக வருமானமிருப்பதாய் கூறிவிட்டு:—தாங்கள் எந்தப் பத்திரிகையின் பிரதிநிதி?

வந்தவர்:—நான் ஒரு பத்திரிகையினுடையவும் பிரதிநிதியல்ல; வருமானவரி இலாகாவின் பிரதிநிதி.

0 0 0

புதிதாகக் குடியேறிய ஒரு பெண்ணினிடம் அவளுடைய சிநேகிதை:—உனக்கு பேசிக் கொண்டிருக்கத் தகுந்த அளவு பக்கத்து வீட்டாரை நன்குயறிவாயா?

அப்பெண்:—அவரோடு பேசுதிருப்பதே நலமென்று தோன்றத்தகுந்த வண்ணம் நன்கறிவேன்.

0 0 0

ஓரிரவு ஒருவழிப் போக்கன் ஒரு வீட்டின் தலைவாயிலில் இடித்துக் கொண்டு" உள்ளே சண்டை செய்யத் தயாராகியோர் யாரேனு மிருக்கின்றார்களா?" என்று கேட்டான். பதிலில்லை. மீண்டும் "ஐயா உள்ளே சண்டை செய்யத் தகுதியுடையோர் யாரேனு மிருக்கின்றார்களா?

உள்ளேயிருந்து ஒரு குரல்:—இல்லை. இங்குயாரும் சண்டைக்குத் தயாராயில்லை.

வழிப்போக்கன்:—அப்படி யானால் எனக்கு அபாயமின்றி இருக்க முடியும். தயவுசெய்து இடமளியுங்கள்.

0 0 0

பற்பல ஆட்சி முறைகளைப் பற்றிப் போதனை செய்துகொண்டிருந்த ஒரு ஆசிரியர் கடைசியாக ஒரு மாணவனைப் பார்த்து:—ஒரு அரசருக்கும் தலைவருக்குமுள்ள வித்தியாச மென்ன?

அம்மாணவன்:—ஒரு அரசர் அவருடைய தந்தைக்குப் பிறக்கின்றார்; ஆனால் தலைவர் அப்படியல்ல,

0 0 0

சொற்பொழிவாளர்:—உங்கட்கு கோழியின்றி முட்டையைப் பெற்றுக் கொள்ள முடியாது; அதுபோல ...............

கூட்டத்திலிருந்தஒருவர்:—இல்லை; என்பாட்டிக்குக் கோழியின்றி முட்டையைப் பெற்றுக்கொள்ள முடியும்.

சொற்பொழிவாளர்:—எப்படி?

கூ—ஒருவர்:—அவள் வாத்து வளர்க்கிறாள்.

ஒரு பார்ப்பான், ஒரு முஸ்லிம், ஒரு மார்வாடி, ஆகிய மூவரும் பேசிக்கொண்டிருந்தபோது ஒருவன்:—நாமின்றிரவு தூங்கச்சென்று விட்டு நாளைக்காலையில் தூக்கமெழுந்திருந்ததும் பெரிய லக்ஷாதிபர்களாகி விட்டோமென்றிருக்கட்டும்; நீங்கள் என்ன செய்வீர்கள்?

பார்ப்பான்:—ஒரு புராணத்தை யெழுதி வெளியிடுவேன்.

முஸ்லிம்:—ஒரு தோல் கிடங்கைத் திறப்பேன்.

மார்வாடி:—நான் அடுத்த நாளும் தூங்கிக் கூடுதலாக வொரு லக்ஷத்தைப் பெற முயல்வேன்.

0 0 0

ஒரு பெண்:—எனக்கு வயிற்றில் தலைவலி பொறுக்க முடியவில்லை.

டாக்டர்:—உங்கள் வயது?

பெண்:—இருபத்தியேழு.

டாக்டர்:—ஞாபக சக்தியைக் கூடத் தலைவலி பாதித்திருக்கிறது.





# சிறுகதைப் பகுதி.

"ஜட்கா வாலா" எழுதுவது.

## என் குதிரைவண்டி.

எங்கள் குடும்பம் பல வருடங்கள் நல்ல நிலைமையிலிருந்து வந்தது ஆனால், நான் பிறந்ததோடு நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாகத் தேய்ந்து கடைசியில் எனது 24வது வயதில் மிகக் கேவலமான நிலைமைக்கு வந்துவிட்டது. அதுகண்டு நானும் எனது சகோதரனும் தாயாரும் மிகவும் கவலை கொண்டோம். ஆயினும் வெளியார் எட்டுணையாவது எங்கள் மீது இரக்கம் காண்பிக்கவில்லை. அவர்களில் பல்லோர் "விஜயரங்கத்தைத் தெரியாதா? அவனென்ன தாழ்வடைந்து விட்டான்? அவன் குடும்பமே அப்படிப் பட்டது தானே? எந்தை அவனுடைய தந்தையின் காலத்தில் கொஞ்சம் பொருள் சேர்ந்தது. அப்பால் வந்தவழியே போய்விட்டது. இதிலென்ன ஆச்சரிய மிருக்கின்றது? எங்கள் அறிவிற் கெட்டியவரையிலும் அந்தக் குடும்பத்தார் குதிரை வண்டிக்காரர்களாகவே தான் இருந்தார்கள். இப்போது விஜயரங்கம் கெட்டு விட்டானென்றால் அவன் தன் மூதாதையர் குடும்பத்தொழிலை கைப்பற்றும் நிலைமைக்கு வந்துவிட்டான் என்பதே பொருள்; என்றார்கள்.

இத்தவார்த்தைகள் சில நாட்களாக என் காதில் விழுந்ததும் நானும்என் தந்தையாரும் பிறரும் குதிரைவண்டிக் காரர்கள் தானென்று ஆராயத் தொடங்கினோம். அதிகம் பிரயாசை செலவாகாமலே அவ் விஷயம் எனக்கு விளங்கி விட்டது. என் தந்தையார் "அசல்" குதிரைவண்டிக் காரர் தானென்பதை என் தாயார் ஒப்புக் கொண்டார். அதோடு தாய்க்கும் என் குடும்பத்தைச் சேர்ந்த பிறருக்கும் குதிரையோட்டத்தைப் பற்றிய பொது அறிவு ஏராளமாக இருந்து வந்தது.

இந்த நிலையில் தரித்திரமும் மிதமிஞ்சி என்னைக் கண்ட கண்டவிடத்திலெல்லாம்-சென்ற விடத்திலெல்லாம் உதைக்கத் தொடங்கவே, நான் அதனைப் பரிகரிக்கின்ற முறையில்என்னதொழிலில் ஈடுபடலா மென்று யோசிக்கலானேன்-

யோசனை நீண்டுக்கொண்டு செல்வதால் பயனென்ன? வட்டிகடை தொடங்கி நடத்துவதற்குப் பெருத்த ஆஸ்தியா விருக்கின்றது? மோட்டார் வைத்து வாடகைக்கு விடவேண்டுமென்றாலும் மோட்டார் வாங்க நானென்ன பெரிய முதலாளியா? உத்தியோகங்கள் பண்ணவேண்டுமென்றால் பி. ஏ.யும், எம். ஏ.யுமா பசாகி இருக்கிறேன்? பி. ஏ. தேறியவர்களெல்லாம் கதிபற்று "பே" எனறலைந்து கொண்டிருக்கிறார்கள்.

ஆகவே நான் சில நாட்களாக யோசித்துக்கொண்டே இருக்க, "பழைய குருடி கதவைத்திறடி" என்ற மாதிரியில் தந்தையார் வைத்துப்போன குதிரைச்சவுக்கையே எடுப்பதென்று தீர்மானித்தேன். என் தாயும் அதனையே பலமாக ஆமோதித்தாள். என் தம்பிக்கு வந்த சந்தோஷத்திற்கோ அளவில்லை. அவனுக்கு, வறுமை தொலையாவிட்டாலும், வயிறுநிறைய கஞ்சிகுடியா விட்டாலும், காலையிலும் மாலையிலும் ஆற்றுக்குக் குதிரையைக் கொண்டு போனாற் போது மென்றிருந்தது. அவன். நால் குதிரை வாங்க வேண்டுமென்று நினைத்த நாளைக்கே நாக்கைச் சுழற்றிக் கொண்டு குதிரையோட்டத்தொடங்கிவிட்டான். அன்றிகண்டகண்ட குதிரைவண்டிக்காரர்களோடெல்லாம் நட்பும் சொள்ளத் தொடங்கி விட்டான். அதோடு ஒருவண்டியையாவது சும்மா நிற்க விடாமல், குதிரையில்லாமலிருந்த போதிலும் அதிலேறி உட்கார்ந்து கொண்டு "கோ ஆண்" சொல்லத் தொடங்கிவிட்டான். "காலப், டிராட்" போன்ற பதங்களும் ஒரு நாளையில் அவன் மண்டையிலேறி இடம் பிடித்துக் கொண்டன. என் குதிரைவண்டித் தந்தைக்கு உண்மையாகப் பிறந்தமகன் அவன் தான் போலும்!

0 0 0

அது எப்படியானாலுமாகட்டும். நான் குதிரைவண்டி வைத்து ஓட்டுவது என்று தீர்மானித்ததும் ஒரு பெரும் பிரசினைவந்து வழிமறித்தது. அந்தப் பிரசினை என்ன? அதுதான் பணமின்மை. வண்டிவைக்க வேண்டுமென்று எளிதில் கூறிவிட்டேனேயல்லாது பணத்துக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. நான் பல நாட்களாகத் தீவிரமாய் யோசித்தேன். என் தம்பியும் சிந்தித்தான். தாயாரும் ஆலோசிக்கத் தொடங்கினாள். சுருங்கச் சொன்னால் என் வீடு முழுதும் தீவிர ஆலோசனை சாலையாயிற்று. முடிவில் என் யோசனையும் தம்பியின் சிந்தனையும் தோற்று மூலையிலிருந்து அழுது கொண்டிருக்க, என் தாயார் ஒருவழி செய்யலானாள். அவள் சில பித்தளைத் தாழிகள், வெங்கலப் பாத்திரங்கள், செம்புக் குடங்களா கியவற்றை ஒன்று சேர்த்தாள். அவைகள் என் தந்தையார் சிறப்புற்றிருந்த காலத்தில் வாங்கப் பெற்றவைகளாம். நானவற்றையெல்லாம் பாத்திரக்கடைக் கந்தசாமியிடம் கொண்டுபோனேன். அவன் என்னென்னமோ பலம்; கழஞ்சு, துலாம் என்ற, எவருக்கும்விளங்காத கணக்கையெல்லாம்--இல்லை குழப்பத்தை யெல்லாம்—சொல்லி என்னை ஏகமாகக் குழப்பிவிட்டு 80 ரூபாய் 5 அணா 7 பைசா தருவதாகக் கூறினான். நான் எக்கேடு கெட்டாவது போகட்டுமென்று அவன் கால் கைகளை யெல்லாம் பிடித்து 83 ரூபாய் வாங்கினேன். அவற்றோடு என் தாயாரும் எப்படியோ 23 ரூபாய் சேர்த்துத் தந்தாள், ஆகமொத்தம் 106 ரூபாயாயிற்று. அவற்றைக் கொண்டு குதிரையும் வண்டியும் வாங்குவதென்று தீர்மானித்தேன். அப்பொழுது தான் என் தந்தையார் காலத்தில் என் குடும்பத்தில் சொல்லப்பட்டுவந்த பாட்டாகிய,

"வடபழியாய்! பல தொழிலு
மிருக்கக்குதிரை
வண்டிவைத்தே பிழைத்திடலாம்
வண்மை யுற்றே"

என்ற அடிகள் உறுதிபடத் தொடங்கின. அ! ஆ!!

0 0 0

ரூபாய் 103 கையில் வந்ததும் நான் எங்கு சென்று குதிரைவாங்கலா மென்று யோசிக்கலானேன். இந்த யோசனை என் தம்பியின் அபாரபுத்தியில் ஆதியிலேயே மூளைத்து விட்டதோ என்னமோ அவன் ஓயாது,

"மதுரையிலே குதிரை
வண்டியோட்டந்தான்—அந்த
மற்றவைகள் வாங்குவது
[மெச்சந்தான"

என்று பாடிக்கொண்டே அலைந்து திரிந்தான். அந்தப் பாட்டு எனது தேடிக்கொண்டிருந்த செவியில் வீழ்ந்ததும் செவி துவாரம்வழியாக, குழம்பிக்கொண்டிருந்த மூளையில் "பட்" டென்று தைத்தது. ஆகவே யொருநாள் என் தம்பியையும் கூட்டிக்கொண்டு நான் மதுரைக்குச் சென்றேன்.

அங்கு ஆயிரக்கணக்கான வண்டிகளும் குதிரைகளும் என் பார்வைக்குக் கொண்டு வரப்பட்டன. செந்நிறமான குதிரைகள், கருமை நிறக் குதிரைகள், மறைநிறக் குதிரைகள், சாம்பல் நிறக் குதிரைகள், கழுதை நிறமுடைய குதிரைகள், மட்டங்கள் பெரிய ஜோடிகள், கோவேறு கழுதைகள், குதிரையென்று தப்பிதமாகக் கொள்ளப்பட்ட சில கழுதைகள் போன்ற ஆயிரக்கணக்கான மிருகங்களையும். முன்னால் சென்றால் கடிப்பனவும், பின்னால் சென்றால் உதைப்பனவும், பக்கங்களில் போனால் மேலே சாய்ந்துவிடுவனவும். ஒன்று மேலாதுபோனால் படுத்துக் கொள்வனவுமாகிய பல ஜந்துக்களும், இன்னும்புண்பட்டவை, குஷ்டம் நிறைந்தவை, சிரங்கு செறிந்தவை, அடிபட்டு புட்டம் கிழிந்துபோனவை போன்ற எத்தனை எத்தனையோ குதிரைகளை பார்த்தேன். அவை யொன்றேனும் எனக்கு ஒத்துச்கொள்ள வில்லை.

0 0 0

நான் இரண்டுநாள் அங்கு தங்கிவிட்டு அப்பால் தல்லாகுளம் பெரியசாமித்தரகனிடம் சென்று விஷயத்தைத் தெரிவித்தேன். அவன் என் விருப்பத்திற்கிசைந்து ஐந்து ரூபாய் கமிஷன் பேசிக்கொண்டு ஒரு பக்கிரிசாமியிடமிருந்து ஒரு குதிரையைக் கொணர்ந்தான்.

அது நல்ல பார்வையுள்ள குதிரை. சுமார் 5 அடியுயரமிருந்தது. எடுப்பான சரீரம், துடிப்பான கால்கள், நொடிப்பான ஓட்டம் எல்லாமமைந்திருந்தது. அன்றி நிறமும் என் மனதிற் கிசைந்த மாதிரி நல்ல வெண்மை நிறமே. அதனை சவாரிக்குதிரையைக் கொண்டுவந்தாலென்ன ஆடம்பரமான வேஷத்துடன்பக்கிரிசாமி கொண்டுவந்தான். நான் அதனை ஒப்புக்கொண்டு விலையும் பேசி முடித்துவிட்டு 'டிரயல்', (சோதனை) பார்ப்பதற்காக பெரிய ரோடுக்குக் கொண்டுவந்தேன்.

குதிரை ரோடுக்கு—அதாவது—வைகைப்பாலத்தின் சமீபம்—கொண்டுவரப்பட்டதும், வேடிக்கைபார்ப்பதற்காக ஏராளமான ஜனங்கள் கூடிவிட்டனர். நான் மனம் நிறைந்த தற்பெருமையோடு குதிரையைப்பிடித்து பாலத்தின் கீழ்க்கடைசியில் கொண்டு நிறுத்த, அங்கு என் தம்பி யாரிடமோ வாடகைபேசி யொரு வண்டியைக் கொண்டுவந்தான். வண்டி குதிரைக்கேற்றாற்போல எடுப்பானதுதான். அதனைக் குதிரையின் பின்னால் கொண்டு நிறுத்திவிட்டு நான் குதிரையை மெதுவாகப் பின்னால் இரண்டு மூன்றடி தள்ளி,வண்டியோடு சேர்த்துப் பிணித்தேன். என் தம்பி வண்டியிலேறியுட்கார்ந்து கொண்டு கடிவாளத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அப்போது குதிரை நின்ற நிலையைப்பார்த்து நான் அது மிக மிகத் துடிப்பான, வேகமுள்ள குதிரை யென்று தீர்மானித்து விட்டேன்.

0 0 0

வண்டியில் குதிரையைப் பிணித்ததும் நாங்கள் எல்லோரும் பொருக்கென நீங்கிவிட்டோம். ஏனெனில் அம்புபோல குதிரை பாய்ந்து விடுமென்பது எங்கள் நினைப்பு. ஆனால் நடந்ததென்ன? நான் முகப்பட்டையிலிருந்து கையையெடுத்ததும் குதிரை சட்டென்று ஒரு குதி குதித்தது, குதிப்பென்றால் முன்னோக்கியா குதித்தது? இல்லை. பின்னால் ஒரு பதினைந்தடி வண்டியை "மடமட" வென்று தள்ளிவிட்டு பின்னங்காலால் பத்துப்பதினைந்துதரம் என் தம்பியையும் வண்டியையும் மாறி மாறி உதைத்தது. அவ்வளவு தான். பூட்டு முழுதும் அற்று வண்டி கால் பர்லாங்கு பின்னால் உருண்டு சென்று, மறிந்து விழுந்து, 3 துண்டாகிவிட்டது. என் தம்பி "ஐயோ! உதை! புதை!!" என்று கத்தி எட்டு பல்டியடித்து கடுரோட்டில் விழுந்தான். விழுந்தவுடன் நின்றதா—ஜனங்களெல்லோரும் ஒரு புறம் கூச்சல் போட குதிரை இன்னொரு பக்கம் நோக்கி ஒரே யோட்டமாக டவுனுக்குள் ஓடியது.வழியில் வருபவர் எவராயினுமலட்சியம்பண்ணவேயில்லை. 5 நிமிஷத்தில் குதிரை மறைந்து போயிற்று. பக்கிரிசாமி இதற்குள் பல தடவை குதிரையைப் பிடிக்க முயன்றான். எவ்வளவு முயன்றும் பலிக்கவில்லை; அவனது விரல்களில் மூன்று குதிரையின் பல்லுக்கிடையில் சிக்கி துண்டிக்கப்பட அவன் கீழே விழுந்து இரத்தக்களரியில் புரளலானான்.

இவ்வாறு பின்னால் போனால் உதைப்பதும் முன்னால் போனால் கடிப்பது மாகிய ஒரு பேய் ஜந்து டவுனுக்குள் போனால்—அதிலும் மேடுபள்ளம் பாராமல் ஓடினால்—என்னவாகும்? என்னைப் போலீசார் விடுவார்களா? அன்றியும் குதிரையென் வீட்டிலுள்ள பாத்திரத்தின் உயிர் தாங்கிய உருவமல்லவா? அப்பாத்திரங்களெல்லாம் டவுனுக்குள் ஓடினால் நான் என்செய்வது?

ஆகவே நான் என் தம்பியையோ பக்கிரிசாமியையோ வண்டியையோ கவனியாமல் காரைக்குடி—மதுரை பஸ் ஒன்றிலேறி டவுனுக்குள் விரைந்து சென்றேன். அங்கு நாயக்கர் புதுவீதியில் குதிரையோடிக் கொண்டிருந்தது. பேய் போல அது ஓடுவதைக் கண்டு ஜனங்கள் நடுநடுங்கி பயந்து அங்கு மிங்கும் குய்யோ முறையோ வெனக்கத்தி யோடிக் கொண்டிருந்தார்கள். பலரை குதிரை மிதித்தும் விட்டது. போலீசாரும் இதரும் "இப்படிக் குதிரையைக் காலித்தனமாக விட்ட தலையார்; அவனைப் பிடியுங்கள் "என்று கத்திக்கொண்டிருந்தார்கள். நான் ரூபாய் போனதுமல்லாமல், தம்பிக்குக் காயம்பட்டது மல்லாமல், போலீசாருமா என்னைத் தன்புறுத்த நினைக்க வேண்டு மென்று நினைத்துக் கொண்டு என்ன செய்வதென்று அறியாது மயங்கினேன்.

இந்த விடத்தில் நான் குதிரைவாங்கப் போன காலம் சத்தியாக்கிரக காலமென்று வாசகர்கள் தெரிதல்வேண்டும். மதுரையில் மறியல், ஊர்வலம், கூட்டம் ஆகியவைகள் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. போலீசார் அவற்றைக் கலைப்பதற்காக கழிகளோடு குதிரைகளையும் உபயோகித்துக் கொண்டிருந்தார்கள். என் குதிரை யோடிப்போன அதே சமயத்தில், வெளிவீதியில் ஓர் மூலையில் குதிரைகளை யோட்டி ஒரு பொதுக் காங்கிரஸ் கூட்டம் கலைக்கப்பட்டது. அதில் பலர் காயமேற்றனராம், அந்தச் செய்தியை அப்பொழுது தான் அறிந்திருந்தவர்களாகிய ஜனங்கள் என் குதிரையை கண்டதும் ஆத்திரம் கொள்ள, நான் ஒருதந்திரம் செய்தேன். "ஆ! இதோ ஓடிக்கொண்டிருக்கும் குதிரை யொருவருக்கும் சொந்தமானதல்ல. ரிசர்வ் போலீசார் குதிரை மீதேறிக் காங்கிரஸ் கூட்டத்துக்குள் சென்று கூட்டத்தைக் கலைத்தார்கள். அப்போது நடந்த அமளியில் வெருண்டு இக்குதிரை யோடிவந்து விட்டது. கூட்டத்தைக் கண்டு சித்தப்பிரமை கொண்டதாலேயே இது இங்ஙனம் ஓடிக்கொண்டிருக்கின்றது" என்று ஒரு "ஔட்"டை விட்டேன். போலீசார் நம்பினர். மேலும் குதிரை பெரிதாகவும் சவாரிக் குதிரை போன்று மிருந்ததல்லவா? அது அவர்களை எளிதில் என் கூற்றை நம்பச் செய்து விட்டது. ஆதலால் நான் ஓடிப்பிடிக்க வேண்டியதற்குப் பதிலாக போலீசாரே குதிரையைப் பிடிக்க முயன்றனர்.

குதிரை பல சந்துகளையும் ரஸ்தாக்களையும் தாண்டி மேலும் கீழும் ஓடலாயிற்று. போலீசாரும் தத்தம் வேட்டியை விட்டு விட்டு பின்னோடியோடலாயினர். கடைசியில் நான்கு கான்ஸ்டேபிள்கள் சேர்ந்து அதனை வைகையாற்றுக்குள் தாத்தி ஒரு பள்ளத்தில் வீழ்த்திப் பிடித்துக் கொண்டார்கள்.

மாலை மணி5. குதிரை போலீஸ்ஸ்டேஷனில் நிற்பது தெரிந்தது. என் கையில் கிடைக்க வேண்டுமல்லவா? என்னவழி? பலபல வெண்ணினேன். கடைசியில் இன்ஸ்பெக்டரிடம் சென்று "என் குதிரையை வீட்டில் கட்டியிருந்தேன். வண்டிக்கார மாரியப்பன் என்மீதுள்ள கோபத்தினாலே நானில்லாத வேளையில் குதிரையை அவிழ்த்து விட்டுத் தாத்திவிட்டான். நான் 3 மணிக்கு வந்து விசாரித்த போது இங்கு நிற்பதாகத் தெரிந்தது" என்றேன். உடனே அவர் மாரியப்பன் மீது வழக்குத் தொடர்ந்ததாகச் சொல்லி அவன் பெயரைப் பதிவுசெய்து கொண்டு என்னையும் போதுமான அளவு திட்டிவிட்டு குதிரையைத் தந்தார். அது நன்றாய் களைத்துப் போயிருந்ததால் நாய்போல என்னோடு வந்தது. நான் அன்றிரவே தம்பியோடு என் சொந்த வூராகிய பெரிய குளத்துக்கு வந்துவிட்டேன்.

0 0 0

வரும்போது நான் தனியாக பக்கிரிசாமியை அணுகி அவனிடம் "குதிரை கடிக்கின்றதே அன்றி அடங்காப் பிடாரியாகவுமிருக்கின்றதே என் செய்வது?" என்று கேட்டேன். அவன் ஆதியில் பதில் எதுவும் சொல்லவில்லையானாலும் அப்பால் "அதற்கு வழியா; கேள். என்னைக் கண்டால் குதிரை உடல் நடுக்குவதைப் பார்த்திருக்கிறாயா?" என்றான்.

நான்:—நல்லது; என்ன செய்வாய் சொல்?

அவன்:—என் குதிரை சதா கடிப்பது வழக்கம். அது கடிக்கவரும் போதெல்லாம் ஒரு கல்லை எடுத்துப் பல்லைத்தட்டிக் கழற்றிவிடுவேன். இதுவரையிலும் 3 பல்

(15 பக்கம் பார்க்க.)

# செட்டிமார் நாட்டு செல்வநிலை

(N. VR.)

தென்னாட்டின் பொக்கிஷமெனப்புகழப்படும் செட்டிமார்நாட்டின் செல்வநிலை இன்று பெரிதும் கவலைக்கிடமான நிலையிலிருக்கிறதென்பதை யாரும் அறியாதாரில்லை. உலகமுற்றும் பணக்கஷ்டத்தால் சிரமப்படும்பொழுது செட்டிமார்நாடு மட்டும் அதனின்றும் தப்பமுடியுமா? பிரிட்டன் தங்கமதிப்பைக் கைவிட்டது. ஜெர்மன் கடன் செலுத்தச் சக்தியின்றித் தவித்துக் கொண்டிருக்கிறது. உலகிலேயே செல்வமிகுந்த தேசமான அமெரிக்காவும் தனது வரவு செலவு திட்டத்தைச் சரிக்கட்டத் திணறுகிறது. சென்ற சில மாதங்களில் அமெரிக்காவில் பல பாங்கிகள் முறிந்துவிட்டன. எந்தப் பொருளையும் வாங்குவாரில்லாமையால் உற்பத்தி ஸ்தலங்களில் ஏராளமான பொருள்கள் குவிந்துகிடக்கின்றன. வியாபாரிகள் தங்கள் தவணைகளை நாணயமாய்ச் செலுத்தத் திண்டாடுகின்றனர். மற்ற தேச மக்கள் பொருளாதாரக் கஷ்டத்தில் உழல்வது போலவே செட்டிமார் நாடும் உழன்று கொண்டிருக்கிறது. வரவினங்கள் பள்ளம் விழுந்துவிட்டன. செலவினங்கள் தினந்தோறும் வளர்ந்து கொண்டே செல்கின்றன. செட்டிமார் நாட்டைக் கண்ணுறும் ஒருவன் பொருளாதாரக் கஷ்டம் இங்கு இருக்கிறதாவென்றே சந்தேகிப்பான். அந்நிலையில் இங்கு ஆடம்பரவாழ்வு நடைபெறுகிறது. பர்மா இரவும் பகலும் பயத்தைக்கொடுத்து கொண்டிருக்கிறது. மலாயா மீண்டும் எழும்புமா என்ற ஐயம் எல்லோருடைய மனத்திலும் தோன்றிக் கொண்டிருக்கிறது. செய்கோனிலும், சிலோனிலும் அரசாங்கத் தொல்லைகள் தாங்கமுடியாதனவா யிருக்கின்றன. எனவே ஒவ்வொரு தனவணிகரும் தங்கள் நாணயத்தைக் காப்பாற்ற முடியாமல் மூச்சுத்திணறுகின்றனர். பத்து லட்சம் ரூபாய் லேவாதேவி செய்யும்கடை பத்தாயிரம் ரூபாய் தவணை செலுத்த வழியின்றி நாணயத்தைக் கைவிடுகிறது. சென்ற மூன்று, நான்கு வருடங்கட்கிடையில் குறிப்பிடத் தகுந்த பல கடைகள் முறிந்து விட்டன. அதன் பயனாக எண்ணற்ற குடும்பங்கள் சீரழிந்து போய்விட்டன. நாடோறும் நாணயம் ஒழுங்காக ஒப்பேறுமா என்ற கவலை ஒவ்வொரு முதலாளியின் மனத்தையும் வாட்டிக் கொண்டிருக்கிறது. இந்நிலை தொடர்ந்து சிலகாலம் இருக்குமானால் செட்டியார் நாட்டின் செல்வநிலை மிகவும் சீர்கெட்டுவிடுமென்பதை ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டும்.

இத்தகைய தொல்லைகளுக்கு மிகுதியும் ஆளாகாமல் தனவணிக சமூகம் இருக்கவேண்டுமானால் தொழில் முறையில் மாற்றம், சிக்கனம் ஆகியவற்றைக் கைக்கொள்ளவேண்டும். இப்பொழுது செட்டியார்களால் கையாளப்படும் தொழில் முறை சட்டம் இன்னதென்றே அறியாதிருந்த காலத்திற்குப் பொருத்தமுடையதுதான். கல்வி அபிவிருத்தியும், உலகானுபவமும் மிகுந்த மக்கள் நிறைந்த இந்தக் காலத்தில் அம்முறை கெடுதலையே உண்டாக்குதல் கூடும். கடனைக் கொடுத்துவிட்டு திரும்பிப் பணம் வருமா என்று ஏக்கங்கொண்டு இருத்தல் சரியல்லவென்பதை உணரவேண்டும். நவீன 'பாங்கிங்' முறையில் லேவாதேவி நடைபெறவேண்டும். பல சிறு கடைகளை ஒன்று சேர்த்து கூட்டுக் கம்பெனியாக்கி புதிய முறையில் தொழிலை நடத்தவேண்டும். ஆண்டுதோறும் கணக்கு முடிக்கப்படவேண்டும். அப்பொழுதுதான் அந்தந்த வருஷத்தின் லாப நஷ்டங்களை எளிதில் கண்டுகொள்ள முடியும். இப்பொழுது இருக்கும் கணக்கு முறைகள் மாற்றப்பெற்று புதிய முறையில் கணக்குகள் வைக்கப்படவேண்டும். அப்பொழுதுதான் இன்கம்டாக்ஸ் முதலியவற்றிற்கு கணக்கை சரியாக 'செக்' பண்ணமுடியும். தனவணிக சமூக இளைஞர்களுக்கு 'புக்கீப்பிங்' கற்றுக்கொடுக்கப்படவேண்டும். வக்கீல்கள், ஆடிட்டர்கள் தனவணிக சமூகத்தவராகவே இருத்தல் வேண்டும். அப்பொழுது தனவணிகர்களுக்கு இப்பொழுது தொல்லையில் பாதியொழிந்துவிடும்.

பணம் சம்பாதிப்பதில் எவ்வளவு கஷ்டங்கள் உண்டாகிற தென்பதை செலவு செய்யும் பொழுது எண்ணிப்பார்ப்பதில்லை. தேவையற்ற பொருள்களிலும், அவசியமில்லாத வீண் ஆடம்பரங்களிலும் எண்ணற்ற பொருள் விரயமாக்கப் பெறுகிறது. பணம் சம்பாதிப்பதில் உண்டாகும் கஷ்டங்களை உணராத பெண்மக்கள் கொடுக்கும் திட்டங்களை, தட்டிச் சொல்லத் தைரியமின்றி, ஆண்மக்கள் நடத்திவைக்க முற்பட்டு அல்லலுறுகின்றனர். சமீபத்தில் நடைபெற்ற பிரசங்கமொன்றில் "பெண்கள் தங்கள் சிறுவாட்டுப்பணத்தைச் செலவு செய்வதில் எவ்வளவு சிக்கனம் காட்டுகிறார்களோ, அதுபோலவே ஆண்கள் கையிலிருக்கும் பணத்தைச் செலவு செய்வதிலும் சிக்கனம் காட்டவேண்டும்" என்று திரு. சொ. முருகப்பா அவர்கள் கூறினார்கள். இம்மொழிகளை ஒவ்வொரு பெண்மணியும் கவனிக்கவேண்டும். சிறுவாட்டுப்பணம் பெண்களால் சிறிது சிறிதாகச் சேர்க்கப் பெறுவதாகும். ஆண்கள் உயிரைக் கையில்பிடித்துக் கொண்டு மூன்றுவருடம் கிம்மதியின்றி கஷ்டப்பட்டு சம்பாதிப்பதை பெண்கள் கண்களில் கண்டதில்லை. ஒருமுறை கப்பலேறினால் அல்லது கூட்டாளி போய் வந்தால் ஏராளமான பணம் சப்பலில் எற்றிவந்து விடும் என்ற எண்ணத்தின் பேரிலேயே வரவு தெரியாமல் செலவுக்குத் திட்டம் போடுகிறார்கள். பிறர்மதிக்க வேண்டுமென்ற எண்ணத்தால் ஆண்களும் திட்டத்தை நடத்திவைக்க முற்படுகின்றனர். இந்நாட்டு இளைஞர்களில் பெரும்பாலார் செல்வமாய் வளர்ந்து ஆடம்பர வாழ்வில் திகழ்ந்தவர்களாதலின் சிக்கனமாய் வாழமுடியாதவர்களா யிருக்கின்றனர். உலகப் பொருளாதார நெருக்கடியைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதேயில்லை. அவர்கள் எண்ணம் ஆடம்பரத்திலேயே சென்று கொண்டிருக்கிறது. இளைஞர்களைக் குறைகூறுவதில் பயனில்லை. ஏன்? முதியோர்களால் அவ்வாறு பழக்கப்பட்டிருக்கின்றனர்.

தனவணிக சமூகம் நல்ல நிலையில் இருக்கவேண்டுமானால் இளைஞர்களுக்கு ஆரம்ப முதல் நல்ல பயிற்சியளிக்கப்படவேண்டும். செட்டிமார் நாட்டில் எங்கேனும் ஒரு ஊரில் குருகுலம் ஒன்று ஸ்தாபிக்கப்படவேண்டும். செட்டியார் சமூகக் குழந்தைகள் நூற்றும் அங்கு படிக்க வசதியிருக்கவேண்டும். தமிழ், இங்கிலீஷ், பர்மா, மலாய், அன்னம், சிங்களம், பிரெஞ்சு பாஷைகள் அங்கு போதிக்கப்படவேண்டும். 'புக்கீப்பிங், ஆடிட்டிங்' கற்றுக்கொடுக்கப்படவேண்டும். ஒரு இளைஞன் குருகுலத்தைவிட்டு வெளிவரும் பொழுது எந்த தேசமும் சென்று "பாங்கிங்" முறையில் லேவாதேவி நடத்தும் திறமையுடையவனாக விளங்கவேண்டும். குருகுலத்தில் பூரண பயிற்சி பெறும் வரை எந்த மாணவனையும் குருகுலத்தினின்றும் வீட்டிற்கு அழைக்கக் கூடாது. கல்யாணம் குருகுல வாசத்திற்கு பின்னர் செய்யப்பட வேண்டும். இன்றேல் படிப்புக்கு ஊறு நேர்ந்துவிடும்.

சமூக உயர்வுக்கு பொதுச்சங்கம் இன்றியமையாத தென்பதை எடுத்துகூறவேண்டியதில்லை. செட்டிமார் நாட்டில் எங்கேனும் ஓர் ஊரில் சங்கத்தின் காரியாலயம் இருக்கவேண்டும். பர்மா, மலேயா, செய்கோன், சிலோன் முதலிய வெளி தேசங்களில் இருக்கும் சங்கங்கள் இச்சங்கத்திற்கு அடங்கியதாக இருக்கவேண்டும். தனவணிக சமூகத்தின் நலனை காடிபுரப்பதில் இச்சங்கம் மிகக் கவனமாகவேண்டும். குருகுலம் இதன் நிர்வாகத்திலேயே இருக்கவேண்டும். ஆண்களுக்குக் குருகுலம் இருப்பது போலவே பெண்களுக்கும் ஒரு குருகுலம் அமைத்து இச்சங்கம் நடத்திவரவேண்டும். அப்பொழுது தான் யாவரும், மாணவிகள் தங்கள் இல்வாழ்க்கையை திறம்பட நடத்தமுடியும். இப்பொதுச்சங்கத்தின் முடிவே தனவணிகர்களின் பொது அபிப்பிராயமாக விளங்கும்படியான சக்தி இருக்கவேண்டும். இன்றேல் இச்சங்கத்தால் பிரயோஜனமில்லை. எவ்வளவு பெரிய காரியத்தையும் முடிக்கும் திறமை பொருந்திய தனவணிகர்கள் எண்ணினால் இவையெல்லாம் பெரிதல்ல. ஆனால் எண்ணம் உண்டாகும் நாள் எந்நாளோ?

## காரைக்குடியிலிருந்து நேராக ஸ்ரீ காசிக்கு ஆடி அமாவாசைக்குப்போகும் "செட்டிநாட்டு 2-வது ஸ்பெஷல் ரயில்."

பாரத பூமியை பூரா பிரதக்ஷணம் செய்து கொண்டு ஸ்ரீ காசி இராமேஸ்வரம் போய் காரைக்குடி திரும்பி வரும்.

2 வது செட்டி நாட்டு ஸ்பெஷல் ரயில் காரைக்குடியிலிருந்து நாளது ஷ ஆனி மீ கடைசி வாரத்தில் புறப்பட்டு திருச்சிரபுரம் உச்சி விநாயகர் தெரிசனம் செய்து கொண்டு, ஸ்ரீ ரங்கம், திருப்பதி, துங்கபத்ரா, பண்டரிபுரம், நாசிக் பஞ்சவடி (திரயம்பகம்) கோதாவரி உற்பத்திஸ்தானம் பம்பாய், சூரத், (தப்திநதி) புரோச் (நர்மதை நதி,) பரோடா, உஜ்ஜெயின், குவாலியர், ஆக்ரா, மதுரா (பிருந்தாவனம் கோகுலம், கோவர்த்தன கிரி, மஹாவனம்) டெல்லி, பாரதயுத்தம் நடந்த ஸ்ரீகுரு க்ஷேத்திரம், ஹரித்துவாரம் (ஸ்ரீ கங்காநதி பூமியில் பிரவேசிக்கிற இடம்) ருஷிகேசம் (இமயமலை அடிவாரம்) நைமிசாரண்யம், லக்ஷ்மணபுரி (ஐக்ய மாகாணத்தின் தலைநகரம்) ஸ்ரீராமர் ஆண்ட அயோத்தி, பிரயாகை, ஸ்ரீ காசி, கயா, தாரகேஸ்வரம், கல்கத்தா, புவனேஸ்வரம், பூரி ஜகன்னாதம், கோதாவரி, பெஜவாடா (கிருஷ்ணா நதி) சென்னைப்பட்டணம் ஸ்ரீ காஞ்சிபுரம் விருத்தாசலம், தனுஷ்கோடி, இராமேஸ்வரம், மதுரை, காரைக்குடி—ஆவணி மீ 2 வது வாரம் வந்து சேரும்.

குறிப்பு:—காசியில் 7 நாள் தங்க ஏற்பாடு செய்யப்படும்.

ஸ்பெஷல் ரயிலில் இடவசதி, வைத்தியவசதி, போஜனவசதி, ஸ்திரீகளுக்கு இடம் ரிசர்வ் முதலிய எல்லா வசதிகளும் மஹாலிங்கம் அண்டு கம்பெனியாரால் செய்யப்படும். முழுப்பிரயாணத்துக்கும் போகவர ரயில் சார்ஜ் யாத்ரா வரி உள்பட

2 வது வகுப்பு ரூ. 244/= 3 வது வகுப்பு ரூ. 122/=

மற்ற விபரங்களுக்கு காரைக்குடி. மஹாலிங்கம் அண்டு கம்பெனிக்கு எழுதித்தெரிந்து கொள்ளவும்.

பிரசோற்பத்தி ஷ பங்குனிமீ உடைய தியாகராஜபுரத்திலிருந்துதற்காலம் சிவகெங்கையில் வாசஞ் செய்யும் பிருமம்ஸ்ரீ சு. ஸ்ரீநிவாச ஐயரவர்கட்கு செட்டிநாட்டு ஸ்பெஷல் ரயிலில் ஸ்ரீ காசி யாத்திரை செய்து வந்த நாட்டுக்கோட்டை நகரத்தார் இராமேஸ்வரத்தில் கொடுத்த

நற்சாக்ஷிப் பத்திரம்.

2. மேற்கண்ட ஸ்ரீனிவாசய்யரவர்கள் சிவபெருமானின் திருவருட்டுணையைக் கொண்டு காரைக்குடியில் "மகாலிங்கம் அண்டு கம்பெனி" என்ற பெயரால் ஓர் கம்பெனியை நிறுவி ஷ ஸ்பெஷலை மிக ஒழுங்காக நடத்திவந்தனர்.

3. ஸ்பெஷல் ரயிலில் நாளது பிரசோற்பத்தி ஷ மாசிமீ அவ காரைக்குடியிலிருந்து பிரயாணமாகி மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் மேன்மை பொருந்திய பிரயாகை, ஸ்ரீகாசி, கயா, ஜகந்நாதம் தனுஷ்கோடி, முதலிய க்ஷேத்திரங்களுக்கும், கல்கத்தா, சென்னை, லக்னோ, டில்லி முதலிய நகரங்களுக்கும் சென்று நாளது பங்குனிமீ உடைய இவண் (இராமேஸ்வரம்) நலமாக வந்து சேர்ந்தோம். ஸ்பெஷலில் நாட்டுக்கோட்டை நகரத்தார் ஆண், பெண் 200 (இருநூறு) பேர் வரையும் அந்தணராதியோர் 25 (இருபத்தைந்து) பேர் வரையும் யாத்திரை செய்தனர்.

4. மேற்படி கம்பெனி மானேஜரான ஸ்ரீனிவாசய்யரவர்கள் ஆங்கிலமொழியில் தேர்ச்சியும், கன்னடம் தெலுங்கு, இந்துஸ்தானி முதலிய மொழிகளிற் பயிற்சியும் பெற்றிருந்ததினால் மேற்கண்ட பாஷைகள் வழங்கும் இடங்களில் வேண்டிய சௌகரியங்களை மிகயெளிதாகவும், நலமாகவும், நடத்திக் கொள்ள நேர்ந்தது. இவர்கட்கு உதவியாளராக இவர்களின் சகோதரரும் உறவினரும் அமர்ந்து பலகாரியங்களை நிருவகித்து செம்மையாக நடத்தினர்.

5. ஸ்பெஷல் குறிப்பிட்டபடி எல்லாவகையாலும் நன்மையாக யாத்திரைகளைச் செய்து வருவதற்கு உதவியாக இருந்ததும், மகாசிவராத்திரி தினமும் ஸ்ரீ விசாலாக்ஷியம்மையார் சமேத ஸ்ரீ விஸ்வநாதரைத் தெரிசனம் செய்யும்படியும், சந்திரக்கிரகண புண்ணிய காலத்தில் ஹரித்துவாரத்தில் ஸ்ரீ கெங்காஸ்நானம் செய்யும்படியும், அமாவாசை தினம் தனுஷ்கோடியில் தீர்த்தமாடும் படியும் நேர்ந்ததும் மிகப்போற்றத் தக்கதாகும்.

6. இந்த ஸ்பெஷலின் உதவியாலேயே ஸ்ரீ காசியாத்திரையை எதிர்பாராத பலருக்கும் கெங்கை முதலியபுண்ணிய தீர்த்த ஸ்நானமும் விஸ்வநாதாதிய மூர்த்திகளின் தெரிசனமும் இன்னும் பல கண்காட்சிகளும்கிடைக்க நேர்ந்தது.

7. ஐயரவர்கள் முதன் முறையிலேயே திறமையாக ஸ்பெஷலை நடத்தியதை எண்ணுங்கால் அடுத்த முறைகளில் மிகத் திறமையாகவும் பின்னும் பலவழிகளில் சௌகரியமாகவும் ஸ்பெஷலை நடத்துவதற்குத் தகுதியாளர் என்பதை நாங்கள் முழுதும் நம்புகிறோம்.

8. அடுத்தடுத்து இத்தகைய யாத்திரைகள் நன்கு நடைபெறும்படியும், ஸ்பெஷலை திறமையாக ஐயரவர்கள் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வ மாதியவளங்களும் பெற்று நீடுவாழும் படியாயும் ஸ்ரீ பர்வதவர்த்தனி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமியின் திருவடிகளை வணங்குகின்றோம்.

7—4—1932 இராமேஸ்வரம்.

(Sd) பள்ளத்தூர். சோ. மு. அ. மெ. அருணாசலம் செட்டியார்.
,, காரைக்குடி. அ. மெ. அ. அண்ணாமலை செட்டியார். & 40 Others.



## தேவகோட்டை.

### ஒரு பிரபல முஸ்லீம் திருமணம்.

(ஒரு நிருபர்)

தேவகோட்டை, 29-4-32.

இவ்வூர் பிரபல வியாபாரியும் பெஞ்சு மாஜிஸ்திரேட்டும் தேவகோட்டை முஸ்லீம் சபை காரியதரிசியுமான ரா. கெ. சி. நயினா முகம்மது ராவுத்தர் அவர்களின் சகோதரியை, காரைக்குடி பிரபல வியாபாரியும் மாஜி பெஞ்சு மாஜிஸ்திரேட்டுமான ஜனாப் அ. கா. காதர்மீரா அம்பலம் அவர்கள் குமாரர் முகய்யதீன் பிச்சை அம்பலம் அவர்களுக்கு காலை 4.30 மணிக்கு நிக்கா என்னும் திருமணம் நடந்தேறியது. அவ்வமயம் ஏராளமானவர்கள் பலவூர்களிலிருந்தும் வந்திருந்தார்கள். அவர்களில் முக்கியஸ்தர்கள் காரைக்குடி முஸ்லீம் இலவச கல்விச் சங்கத் தலைவர் ஜனாப் ச. பீ. க. நயினாமுகம்மது ராவுத்தர் ஷெயூர் முனிசிபல் கவுன்சிலர் ஜனாப் ச. பீ. முகம்மது இபுறாஹிம்ராவுத்தர், திருப்புத்தூர்யூனியன் வைஸ்பிரசிடெண்டு ச. யி. மு. அசனிபுறாஹிம் ராவுத்தர், குன்றக்குடி பெஞ்சு மாஜிஸ்திரேட் ஜனாப் முகம்மது அப்துல்காதர் ரூர். தொண்டி டிஸ்ட்ரிக்ட்போர்டு கண்டிராக்டர் மஸ்தான் கனி ரூர். தமிழ் மாகாண முஸ்லீம் காரியதரிசி சி. ஜனாப் செ. மு. சுல்த்தான் பத்தாதி, திரு. அ. வெ. தியாகராஜன் செட்டியார் அவர்கள், பெஞ்சு மாஜிஸ்திரேட் திரு. எஸ். திருமலை ஐயங்கார் முதலியோர் குறிப்பிடத்தக்கது.

திருமணமானது ஆடம்பரமன்னியில் மேளம், வீண் சடங்குகளின்றி, ஆலிம்களும், தேவகோட்டை ஹிதாயத்துல் இஸ்லாம் வாலிப சங்கத்தாரும், ஏராளமான கூட்டத்துடன் கொடிகளோடு மணமகளை பெண் கிரஹத்திற்கு அழைத்துவந்தது மிகச் சிறப்பாகவிருந்தது. நிக்காஹ் ஆனவுடன் ஷெ சங்கத்தார்களும் திருப்புத்தூர் அப்துல்கரீம் புலவர் அவர்களும் மணமகனுக்கு மாலை சூட்டி மங்கள வாழ்த்துப் பாடியது சபையோரை பரவசமாக்கியது.

இவ்வூர் முஸ்லீம் இஸ்லாம் மார்க்கப்படி ஒற்றுமையாக சட்டுப்பாட்டுடனிருப்பது போற்றத்தக்கது. ஏழைகளுக்கும், ஆலிம்களுக்கும் சன்மானமளிக்கப்பட்டது. ஹிதாயத்துல் இஸ்லாம் வாலிப சங்கத்தாருக்கு ரூ. 8-ம், தமிழ் மாகாண முஸ்லீம் சபைக்கு நன்கொடையாக ரூ. 20-ம் சம்பாவம் செய்யப்பட்டது. பிறகு வந்தவர்களுக்கு சிற்றுண்டி வழங்கப்பட்டது. காரைக்குடி முஸ்லீம் இலவச கல்விச்சங்க உபத்தலைவர் ஜனாப் அ. கா. அல்லாபிச்சை அம்பலம் வந்தவர்களை நல்ல முறையில் உபசரித்து கண்ணியப்படுத்தினார்கள்.

## தளக்காவூரில் புதியபள்ளிக்கூடம்

தளக்காவூர் என்பது மாநகரியின் சமீபமிருக்குமொரு சிறுகிராமம். அங்கு பெரும்பாலாக ஆதிதிராவிடர்களே தங்கிவருகிறார்கள். இவர்களுடைய குழந்தைகள் போதிய பள்ளிக்கூட வசதியின்மையால் கல்வியற்றவர்களாயிருக்கின்றார்கள். சமீபத்திலுள்ள மாநகரிக்கு அனுப்பினால் அங்குள்ள ஆசிரியர்கள் ஆதிதிராவிடர்களென்ற காரணம் பற்றி ஏற்றுக்கொள்கின்றார்களில்லை. ஆகவே தளக்காவூர் ஆதிதிராவிட அன்பர்கள் தேவகோட்டைத் தாலூகா போர்டுக்கு மனுச்செய்து தங்களுக்கென்று ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். தாலூகா போர்டார், மேற்படி தளக்காவூர் வாசிகள் ஒரு கட்டிடத்தைக் கட்டிக் கொண்டால் நிர்வாகச் செலவு முழுதும் தாங்கள் ஒத்துக் கொடுப்பதாக அறிவித்தனர். இதன்வண்ணம் தளக்காவூர் ஆதித்திராவிடர்கள் ஒரு பள்ளிக்கூடத்தைக் கட்டி முடித்து விட்டார்கள். அன்றி ரிப்போர்ட்டும் தாலூகாப் போர்டுக்குக் கொடுத்தாகிவிட்டது. ரிப்போர்ட்டுக் கொடுத்து 6 மாதங்களாகியும் பள்ளிக்கூடம் நடப்பதற்கான ஏற்பாடு நிகழவில்லை. கூடிய சீக்கிரம் பள்ளிக்கூடம் ஏற்படுத்தப் படுமென்று தெரிகிறது. ஆதிதிராவிடர் பால், தாலூகா போர்டார் சலுகை காட்டிவது பாராட்டத் தகுந்தது என்று ஒருவர் எழுதுகிறார்.

## செட்டியார் கடையாட்கள் கொலை.

### குற்றவாளிகள் யார்?

தனுப்பியுவைச் சேர்ந்த அலமியோவில் நடந்த செட்டியார் கடையாட்கள் படுகொலையை யொட்டி குற்றவாளிகளைக் கண்டுபிடித்து ஒப்புச் சொல்லுகிறவர்களுக்கு 500 ரூபாய் இனாம் அளிப்பதாக மூப்பின் டெபுடி கமிஷனர் தெரிவித்திருக்கிறார்.

## கீழப்பூங்குடி.

### வாண வேடிக்கையில் விபத்து.

4. மே.

இவ்வூரில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் முளைமுப்புத் திருவிழாவை முன்னிட்டு நேற்று இரவு நடைபெற்ற வாண வேடிக்கையினால் பெரிய விபத் தேற்பட்டது. வாண வேடிக்கை காட்டுவோரைச் சேர்ந்த ஒரு சிறுவன் ஒருவன் ஒரு கூடையில் பலவித வாணங்களைச் சுமந்து கொண்டு சென்றபோது, முன்னாடி விடப்பட்டிருந்த சுழல் வானத்தி லிருந்து ஒரு தீப்பொரி தற்செயலாகக் கூடையில் விழுந்துவிட்டது. விழுந்ததும் எல்லா வாணங்களும் ஒன்றாகத் தீப்பற்றி நாலா பக்கமும் பாய்ந்து பலரைக் காயப்படுத்தி விட்டது. காயம் பட்டோர் தொகை சுமார் அறுபதிருக்கலாமென்று தெரிகிறது. அவர்கள் சிவகங்கை, மதகுபட்டி ஆகிய ஆஸ்பத்திரிகளில் சிகிச்சிக்கப் படுகின்றார்களென்று தெரிகிறது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

## திரு சாத்தப்பசெட்டியார் மனு. மாஜிஸ்திரேட் நிராகரிப்பு.

காளீஸ்வரர் மில் ஏஜண்டு திரு. பி. எஸ். சாத்தப்ப செட்டியார் மீது வழக்குத் தொடுத்த மேற்படி மில் பங்காளிகளில் ஒருவரான திரு. ரத்ன சபாபதி கௌண்டர்மீது இ. பி. கோ. 211, 193 பிரிவுகள் படி பொய்யான பிராது செய்ததாகவும், பொய் சாக்ஷியஞ் சொன்னதாகவும் வழக்குத் தொடுக்கவும், மேற்படி திரு. சாத்தப்பசெட்டியார் மீது நடந்தவழக்கில் வாதிதரப்பில் சாக்ஷியாக விசாரிக்கப்பட்ட திரு முருகநாதம் செட்டியார் மீதும் பொய் சாக்ஷியம் சொல்லியதாக வழக்குத்தொடுக்கவும் சாங்கிஷன் கேட்டு திரு. சாத்தப்ப செட்டியார் கோயம்புத்தூர் சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்கோர்ட்டில் மனு செய்து கொண்டார். மேற்படி மனுவில் கேட்டுக் கொள்ளப்பட்டபடி சாங்கிஷன் கொடுப்பது பொதுஜன நன்மைக் கேற்றதாயில்லையென மாஜிஸ்திரேட்டு அபிப்பிராயப்பட்டு மனுவை தள்ளுபடி செய்தார்.

[தமிழ் நாடு]

## காளீச்வரர் மில் டைரெக்டர் தேர்தல்.

### கோவை ஸப் கோர்ட்டில் ஒருவழக்கு.

ஸ்ரீமான் எஸ். ஆர். எம். எஸ். ராமசாமி செட்டியார் காளீச்வரர் மில்ஸ் சார்பாகவும், தம் சார்பாகவும் சப் கோர்ட்டில் தேவகோட்டை குமார ஜமீன்தார் ஸ்ரீமான் ஏ. எல். ஏ. ஆர். காளை ராஜா மீதும் கோவை முனிசிபல் வைஸ் சேர்மன் ஸ்ரீமான் வி. அருணாசலம் செட்டியார் மீதும் ஒரு பிராது கொடுத்திருக்கிறார். அவர்கள் மில் டைரெக்டர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதை ரத்து செய்யவேண்டுமென்றும், டைரெக்டர் போர்டு நடத்திய அந்தத் தேர்தல் சங்கவிதிகளில் 116, 118-வது பிரிவுகளின்படி பங்குக்காரர்களின் பொதுச் சபைக்கறிவிக்கப்படவில்லையென்றும் பிராதில் கூறப்பட்டிருக்கிறது. வழக்கு விசாரணை ஜூலை 6-ந்தேதிக்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## காரைக்குடி சூதாட்டம்.

உள்ளூர்போலீசார் சூதாட்டமாடுவோர் மாட்டுக்கடுமையாய் நடந்துகொள்கின்றார்களென்றுதெரிகிறது. சனிக்கிழமையன்று மாலை 5மணிக்கு காரைக்குடி பெருமாள் கோயில் கம்வாயில் சூதாட முயன்றுகொண்டிருந்த பலரை சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் சில கான்ஸ்டேபின்களும் கைப்பற்றி நன்றாக எச்சரிக்கை செய்து விட்டுவிட்டார்கள்.

## செட்டியாருக்கு ஒரு லக்ஷம் நஷ்டம்.

### நெல் யந்திரசாலை தீக்கிரை

புரோம் ஜில்லாவில் ஒரு செட்டியாருக்குச் சொந்தமான நெல் யந்திரமானது 29-4-32-உ காலை தீக்கிரையாயிற்று. இந்த மில் ஒரு லக்ஷம் மதிப்பேறும். 70 ஆயிரம் ரூபாயிக்கு இன்சூர் செய்யப்பட்டது. அங்கு வைக்கப்பட்டிருந்த 60 ஆயிரம் கூடை நெல்லும் நாசமாயின. இது விஷமிகளின் செய்கைதானெனத் தெரிய வருகிறது.

## டச்சு ரப்பர் தோட்டம்.

### 212 தோட்டங்கள் மூட்டப்பட்டன.

பட்டேவியா, ஏப். 24.

டச்சுக் கிழக்கிந்திய ரப்பர் தோட்டங்களில் 70,000 ஏக்கர் விஸ்தீர்ண முள்ள 212 தோட்டங்களில் பால்வெட்டு அறவே நிறுத்தப்பட்டுத் தோட்டங்களும் மூடப்பட்டன. 43,000 ஏக்கர் மொத்த விஸ்தீர்ணமுள்ள 121 இதர தோட்டங்களில் பால் வெட்டுக் குறைக்கப்பட்டிருக்கிறது.

## அண்ணாமலை பல்கலைக்கழகம்.

### திரு. ரங்கநாதன் மீண்டும் உப அத்தியக்ஷகர்.

திரு. எஸ். இ. ரங்கநாதன் அவர்கள் மீண்டும் அண்ணாமலை ஸர்வகலாசாலை உப அத்தியக்ஷகராக 3 வருஷத்திற்கு நியமிக்கப்பட்டுள்ளார்.

## சிவகங்கை சப்ஜட்ஜ்.

திரு. ஆர். ரங்கசாமி ஐயங்கார் சிவகங்கை சப்ஜட்ஜாக ஆக்டுசெய்ய நியமிக்கப்பட்டுள்ளார்.

## சிவகங்கை ராஜா பள்ளிக்கூடம்.

சிவகெங்கை ராஜா பள்ளிக்கூட ஆண்டு விழா கொண்டாட்டம் இந்த மாதம் 1-உ அதி விமரிசையாக நடைபெற்றது. அவ்வைபவத்திற்கு சிவகங்கை ராஜா தலைமை வகித்தார்.

வக்கீல் திரு. கிருஷ்ணசாமிப் பிள்ளை ராஜா, பாடசாலைக்குச் செய்துள்ள நன்மைகளைப் பற்றி யெடுத்துக்கூறி ஒரு பிரசங்கம் செய்தார்.

பின்னர் மாணவர்கள் தமிழ் நாடகமொன்று நடத்தினர்.

## பிள்ளையார்பட்டி விபத்து.

சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று பிள்ளையார்பட்டி கோவிலில் வேலைசெய்து கொண்டிருந்த ஒருவன் மயக்கங் கொண்டு வீழ்ந்து மூர்ச்சையானானென்று தெரிகிறது.

## திரு. ரயினிஸ்பிள்ளை ஸப் டிவிஷன் டெப்யூட்டி சூப்பரிண்டெண்டு.

புதுக்கோட்டையில் சென்ற வருஷம் போலீஸ் கமிஷனராயிருந்த திரு. ரயினிஸ் பிள்ளையவர்கள் மதனப்பள்ளி ஸப் டிவிஷன் டெப்டி சூப்பரிண்டெண்டாக நியமிக்கப்பட்டுள்ளார்.

## மதுரை புதிய ஜில்லா வைத்திய உத்தியோகஸ்தர்.

மேஜர் கே. வி. ரமணராவ் அவர்கள் மதுரை ஜில்லா வைத்திய உத்தியோகஸ்தராகவும், கவர்ன்மெண்டு ஹெட்குவார்ட்டர் ஆஸ்பத்திரி சூப்பெரிண்டெண்டாகவும், ஆக்டு செய்யும்படி நியமிக்கப்பட்டுள்ளார்.

## தீக்குச்சி தொழிற்சாலையில் வேலை நிறுத்தம்.

சென்னை திருவொற்றியூருள்ள மேற்கிந்திய தீக் குச்சி சாலையில் வேலை செய்து கொண்டிருந்த தொழிலாளர்களில் 700 பேர் இன்று காலை வேலை நிறுத்தம் செய்துவிட்டனர்.

## இராமநாதபுரம் ஜில்லா.

### பஞ்சாயத்துப் போர்டுகள்.

#### அங்கத்தினர் தேர்தல்.

இராமநாதபுரம்ஜில்லா தேர்தல் ஆபீசர் அவர்கள் பின்வருமாறு அறிவிக்கிறார்கள்.

இராமநாதபுரம், இராமேஸ்வரம் தேவி பட்டணம், கீழக்கரை, பாம்பன் முதலிய பஞ்சாயத்து போர்டுகளின் அங்கத்தினர் தேர்தலுக்கு 9—5—32ல் இராமநாதபுரம் தாலூகா ஆபீசில் நியமனச்சீட்டுகள் வாங்கப்படும். நியமனச்சீட்டுகள் 10—5—32ல் பரிசீலனை செய்யப்படும் 20—5—32—ல் தேர்தல் நடைபெறும்.

கானாடுகாத்தான், கோட்டையூர், பள்ளத்தூர், கண்டனூர், புதுவயல், திருப்பத்தூர் முதலிய பஞ்சாயத்துப் போர்டுகளின் அங்கத்தினர்கள் தேர்தலுக்கு 13-5-32ல் திருப்பத்தூர் தாலூகா ஆபீசில் நியமனச்சீட்டுகள் வாங்கப்படும். 18—5—32ல் பரிசீலனை செய்யப்படும். 23—5—32ல் தேர்தல் நடைபெறும்,

தொண்டி, தேவகோட்டை முதலிய பஞ்சாயத்துப் போர்டுகளின் அங்கத்தினர்கள் தேர்தலுக்கு 23—5—32ல் திருவாடானையில் நியமனச்சீட்டுகள் வாங்கப்படும் 24—5—32ல் பரிசீலனை செய்யப்படும் 28—5—32ல் தேர்தல்நடைபெறும்.

## இராமநாதபுரம் ஜில்லா குலாலர் முதல் மகாநாடு.

இராஜபாளையம் திரு. அங்கய ராஜவிலாஸ் ஹாலில் வைகாசி மாதம் 2-ந் தேதி 15-5-32 ஞாயிற்றுக்கிழமை இராமநாதபுரம் ஜில்லா குலாலர் முதல்மகாநாடு நடைபெறும். போடிநாயகனூர் கோட்டக்குடி ஜமீந்தார் ராவ் சாஹிப் ஏ. எஸ். அழகண்ணன் செட்டியார் எம். எல். சி. தலைமை வகிப்பார், திருநெல்வேலி ஜில்லா அஸிஸ்டெண்ட் கலெக்டர் திரு. பி. ராம்தாஸ் மகாநாட்டைத் திறப்பார்.

# செட்டிமார் நாட்டு வாலிபர்கட்கு.

(திரு. இராம. சுப்பையா.)

சகோதரர்களே!

நாடுகள் தோறும் இளைஞர்கள் தங்கள் தங்கள் நாட்டிற்கு இயற்றிவரும் அருந்தொண்டுகளை நமக்குத் தினசரி பத்திரிகைகள் செவ்வனே கூறுகின்றன. நமது வங்காள நாட்டு வாலிபர்கள் தாய் நாட்டின் சுதந்திரத்திற்காக எத்தனையோ துன்பங்களைத் தலைமேற்றாங்கி, உயிரையுந் தியாகஞ் செய்கின்றனர்; சிறைச்சாலைக்குப் புன் சிறிப்புடன் செல்லுகின்றனர். இத்தேசத் தொண்டு மட்டுமல்ல. தங்கள் நாட்டு மக்கள் கல்வி, அறிவு, ஒழுக்கத்தில் சிறப்புற்றோங்க வேண்டுமென்றும், பழயவழக்கங்கட்குசிறிதும்இடம்கொடாது சீர்திருத்தம் பெற்றவர்களாக இருக்கும் பொருட்டும், அநேக சங்கங்கள், வித்தியாலைகள் முதலியன ஆங்காங்கு ஏற்படுத்தி அவைகளிலிருந்து அச்சுப் பிரசுரங்கள் வெளியிட்டும் மற்றும் வேண்டிய சாதனைகள் செய்தும், ஊக்கமுடன் உழைத்து வருகின்றனர். சீர் திருத்தத்தின் பொருட்டு பத்திரிகைகள் தனித்தனியே உயர்ந்த முறையில் வெளிவந்து வேண்டிய உதவி புரிகின்றன.

2 அங்ஙனம் நாட்டினருக்காக பெருங்கஷ்டங்கட்கு ஆளாகி சிறிது சிறிதாக முன்னேறி வருவதைப் பார்த்து பின்னர்கூட, நம்மவர்கள் இளைஞர் பெரும்பாலோர் தூங்கிக் கொண்டிப்பது வருந்தற்பாலது என்பது ஈங்கு கூறுவது மிகையாகாது. வாலிபர்கள் நம் நாட்டிற்காகப் புரியவேண்டிய தொண்டுகள் பல ஏனெனில் நம் நாடு (செட்டிமார் நாடு) பொதுவாக ஆராய்வின் கல்வி, தேசத் தொண்டு, ஜாதிமத சீர்திருத்தம் முதலியவற்றுள் ஒன்றிலாவது சிறந்தது என்று கூறுவதற்கு ஆன்றோர் பலர் ஆக்ஷேபிப்பர் எனவே எண்ணுகின்றேன். ஆனால் ஒன்றில் மட்டும் இடைவிடா ஊக்கங் கொண்டுளது. அதுதான் பழய மூட பொருளற்ற பழக்கங்களை மிகுந்த சிரமத்துடன் நிறைவேற்றுவது "முற்காலத்தில் என் தந்தை கள்ளுக் குடித்தான் இக்காலத்தில் யானும் குடிப்பேன்" என்ற சொல்லுக்கேற்ப பிற நாடுகள் எல்லாத்துறைகளிலும் சாலச் சிறந்தோங்க, நம்நாடு இருள் நீங்கி அருள் ஒழிவரப்பெறு கிற்கின்றது. சற்று யோசிப்பின் நம்மரபினர் தேடும் பொருள்களை வீணே செலவிடாது, மக்கள் முன்னேறக் கூடிய வழிகளிலும் ஏழைகட்கு துன்பம் நீங்கும் வழிகளிலும் செலவு செய்து வந்திருப்பின் எவ்வளவோமேம்பட்டிருப்போம்; போற்றப்பெற்றிருப்போம்.

இனி வாலிபர்கள் நாம் பிறந்து வளர்ந்த நாடாகிய செட்டிமார் நாட்டை பிற நாடுகள் போன்று வாழ்வு இன்புறுவதற்கு செய்யவேண்டிய சிற்சில இன்றியமையாத கடமைகளைக் குறிப்பிடுகிறேன். முதன் முதலில் நம் பெண்களுக்கு கல்வி கற்பிக்க வேண்டும். அதின் நன்மைகளை எற்கனவே இரண்டு வாரத்திற்கு முன் இதழில் அன்பர்கள் படித்திருக்கலாம். 2, குழந்தைகளை நல்ல முறையில் பயிலச் செய்தல்வேண்டும். தாய்பாஷை கற்றபின்னரே, பிற பாஷையை கற்க முயலும்படி செய்தல்வேண்டும். கல்வி கற்கும் சிறுபிராயத்தில் கல்யாணம் செய்ததின் காரணமாக பல செட்டிமார் நாட்டு மாணவர்கள், கற்பதை நிறுத்தி சிற்றின்பக் கடலில் மூழ்குகின்றனர். எனவே மாணவர் பயிலுங்கால் மணம் புரிய இசைதல் கூடாது, அதனை முன்னிட்டு சென்னை சட்டசபையில் சட்டங்கள்வந்து நிறைவேறியும் அமுலுக்கு வராமல் இருப்பது வருந்தத்தக்கது. 3. இளைஞர்கள் ஆங்காங்கு சங்கங்கள் ஏற்படுத்தி பத்திரிகைகள் தருவித்து உடற்பயிற்சிக்கு வேண்டுவன செய்து பெரியார்களைக்கொண்டு உபந்நியாசங்கள் நடைபெறச் செய்து, சீர்திருத்தக் கொள்கைக்கு வேண்டிய பிரசுரங்கள் அச்சிட்டு வெளியிடவேண்டும். பிரசுரங்கள் வெளியிடுவதுடன் பூர்ண நம்பிக்கை பெரிதும் கொண்டுளோர்க்கு அதன் கெடுதல்களையும், இக்காலத்தில் அது வேண்டாமையின் காரணங்களையும் எடுத்துரைத்து அப்பழக்கங்களைத் தடுக்க முயலல் வேண்டும். சங்கங்கள் செட்டிமார் நாட்டில் தோன்றின் மிக்க ஆதரவு அளிக்கும். எவ்வாறு காங்கிரஸ் தேசத்திற்காக தியாகஞ் செய்கின்றதோ அவ்வாறு சீர்திருத்தத்திற்காக வாலிபர்கள் தங்கள் உடல் நலத்தை தியாகஞ்செய்தல் வேண்டும். அதுவே உண்மைச் சுயமரியாதை இயக்கத்தைக் காட்டும். 4. சில மாதங்கள் கிட்டுமுன் வங்காளம் சென்னை மாகாணம் முதலிய நாடுகளின் (Buy Indian-League) என்று சொல்லப்பட்ட சுதேசிச் சாமான்கள் வாங்கும்படி ஆதரிக்க சங்கங் ஏற்பட்டு வாலிபர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து சுதேசிச் சாமான்களையே வாங்குவது எனத் தீர்மானித்து ஊக்கமுடன் உழைத்து வருகின்றதை காண்க மகிழ்வைத் தருகின்றது. அவைபோன்று நம் நாட்டிலும் கழகங்கள் ஏற்படுத்தி தாய்நாட்டுச் சாமான்களையே ஆதரிக்க அனைவரும் முயலல் இதுபோழ்து இந்தியர் ஒவ்வொருவரின் முக்கியமான கடமை இந்தியா இருக்கும் ஏழ்மையில் குழந்தைகள் பிறப்பதை அடக்க வேண்டுமென்பது அன்றோர் பலர் கருத்து. அதன் நன்மைகளையும் பிறப்பை தடுக்கும் முறைகளையும் நம்மவர்கள் தெரிந்திருப்பின் பல கவலைகளினின்றும் நீங்கலாம், அயல் நாடுகள் பலவற்றில் அதற்காக சங்கங்கள் ஏற்படுத்தி உலகில் மக்கள் பெருகுவதை நிறுத்தி வருகின்றனர்- அவைகள் போல் நாமும் அதில் சிரத்தை கொள்ளுவது மிக்க மேன்மை.

இதுபோன்ற வியாசங்கள் செட்டிமார் நாட்டுப் பத்திரிகைகளில் அடிக்கடி வெளிவந்தும் பெரும்பான்மையோர் கொள்கைகளைச் செயலளவில் காட்டாமை கண்டு இனியேனும் உணர்ந்து வாலிபர்கள் ஊக்கமுடன் உழைத்துவர வேண்டும் என்ற கருத்துடனே எழுத துணிவு கொண்டேன்.

## அம்பேத்காருக்கு கருப்புக் கொடி.

### வக்கீல்கள் கைதியாயினர்.

டாக்டர். அம்பேத்கார் நாகபுரிக்கு வந்தபோது போலீஸ் உதவியால் அவரது சிஷ்யர்கள் அவருக்கு வரவேற்பளிக்க வசதி யேற்பட்டது. டாக்டர் அம்பேத்கார் கொள்கைக்கு மாறுபட்டவர்கள், அவரைப் பகிஷ்கரிக்கும்படி கருப்புக் கொடிகளுடன் நின்று கொண்டிருந்தனர். போலீசார் அவர்களைக் கைது செய்து கருப்புக் கொடிகளை பிடுங்கிக் கொண்டனர், போலீசார் எவ்வளவோ ஏற்பாடுகள் செய்திருந்தும், அம்பேத்கார் ஸ்டேஷன் வந்ததும் அம்பேத்காரே திரும்பிப் போ!' என்ற சப்தத்தையே முதலில் கேட்டார். தீண்டாதாருக்கு தனித்தொகுதி கூடாது கூட்டுத் தொகுதியே வேண்டுமென்ற கொள்கையுள்ள திருவாளர்கள் மாதி, காந் முதலிய 4வக்கீல்களை போலீஸ்பந்தோபஸ்தில் வைத்திருப்பதாகத் தெரிகிறது.

## மாஜி கவர்னருக்கு பட்டம்.

### சர். ஸ்டான்லி ஜாக்சனுக்கு மன்னர் விருந்து.

வங்காள கவர்னராக இருந்த சர். ஸ்டான்லி ஜாக்சன் மே 6-ந் தேதி யன்று பக்கிங்காம் அரண்மனை சென்று மன்னரைக் கண்டபோது, அவருக்கு மன்னர் ஜி. வி. எஸ். ஐ. பட்டமளித்து சர். ஸ்டான்லி ஜாக்சன் தம்பதிகளுக்கு விருந்துபசாரம் செய்தார். மன்னரை 4 இந்திய மெய்காப்பாளர்களும் சென்று பார்த்தனர்.

## இந்திய விமானியின் தைரியம்.

### சார்டிப் மேயர் உபசாரம்.

லண்டனிலிருந்து இன்னும் சில வாரங்களில் தனிமையாக இந்தியாவுக்கு விமானத்தில் அதி சீக்கிரத்தில் வந்துசேர தீர்மானித்திருக்கும் இந்திய மாணவர் திரு. ஜி. பி. நாயருக்கு சார்டிப் மேயர் உத்தியோக தோரணையில் வழியனுப்பு உபசாரம் செய்வார்.

## குமரன் டைரி.

பர்மாவிலிருந்து குமரன் டைரிகளுக்கு நமக்கு ஆர்டர் அனுப்பியவர்கள், நமது லோகல் ஏஜண்டு, ரெங்கூன் 123. மோகல் தெரு, ராம. செ. ராம. செல்லப்ப செட்டியாரவர்களிடம் பெற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

மானேஜர்,
குமரன், காரைக்குடி.


# குமரன்

காரைக்குடி
ஆங்கிரச-ஞு சித்திரை-மீ ௩௦-உ


## பார்ப்பனரல்லாத கட்சிக்குச் சாவுமணியா?

சென்ற 7-ம் 8-ம் தேதிகளில் திருச்சி ஜில்லா பார்ப்பனரல்லாதார் 6—வது மகாநாடும், பார்ப்பனரல்லாத இளைஞர் மூன்றாவது மகாநாடும் கூடி முடிவு பெற்றன. மகாநாடுகள் வெற்றி பெற்றனவா தோல்வி யுற்றனவா என்று முடிவு செய்யும் பொறுப்பு தென்னாட்டு மக்களுடையது. ஆகவே இம் மகாநாட்டைப்பற்றி நமக்குத் தோன்றும் அபிப்பிராயங்களை மட்டும் நாம் இங்கு குறிப்பிடுகின்றோம்.

1929 ஜுன் மாதத்தில் நடைபெற்ற நெல்லூர் பார்ப்பனரல்லாதார் மகாநாட்டுக்குப் பிறகு இதுவரை மகாநாடு நடைபெறவே இல்லை. ஜஸ்டிஸ் கட்சியில் பார்ப்பனரைச் சேர்த்துக்கொள்ளலாமா கூடாதா என்ற பிரச்சினை அந்த மகாநாட்டுக்கு முன்னமேயே கிளம்பியிருந்தது. தென்னிந்திய நல உரிமைச்சங்க நிர்வாக கமிட்டியில் பார்ப்பனரைச் சேர்த்துக்கொள்ளலாமென்றும் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. மாகாண மகாநாட்டில் அத் தீர்மானம் ஒப்புக்கொள்ளப் பட்டாற்றான் ஊர்ஜிதத்துக்கு வரமுடியும். நெல்லூர் மகாநாட்டின் பலமான எதிர்ப்பு இருந்ததினால் அத்தீர்மானம் கொண்டுவரப்படாமல் மழுப்பப்பட்டது. நெல்லூர் மகாநாட்டில் தெரிவித்திருந்தபடி அடுத்த மகாநாடு இதுவரைகூட்டப்படவில்லை. பல முறை மகாநாடு நடைபெறப்போவதாக அறிக்கைகள் வெளிவந்தனவாயினும், மகாநாடு கூடாமல் ஒத்திப்போடப்பட்டே வருகிறது. இதனால் தென்னாட்டுப் பார்ப்பனரல்லாதார் மனத்தில் பலமான சஞ்சலம் ஏற்பட்டிருப்பதை அனைவருமறிவர். மகாநாடு ஒத்திப்போடப் படுவதற்குப் பலர் பலவிதமான காரணங்கள் சொல்லிக் கொள்கிறார்கள். தலைவர்கள் தக்க காரணம் வெளியிடவுமில்லை. எனவே பார்ப்பனரை ஜஸ்டிஸ் கட்சியில் சேர்த்துக் கொள்ளும் பிரச்சினையை முடிவுசெய்வதற்காகவே திருச்சி மகாநாடு அவசரம் அவசரமாகக் கூட்டப்பட்டது. சென்றமாதத்தில் கனம் முதன்மந்திரி முனிசாமி நாயுடு அவர்கள் திருச்சிக்கு விஜயம் செய்திருந்த போது பார்ப்பனர்களை ஜஸ்டிஸ்கட்சியில் சேர்த்துக்கொள்ளும் காலம்சமீபித்து விட்டதென்றும், பார்ப்பனர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டியது அவசியமென்றும் பேசியதினால் திருச்சி மகாஜனங்கள் மனத்தில் ஆத்திரம் அதிகமாயிற்று. ஆகவே அந்தப் பிரச்சினையை முடிவுசெய்வதற்காகவே மகாநாடு முக்கியமாகக் கூட்டப்பட்டது. இதுபற்றி மகாநாட்டுக் காரியதரிசிகளில் ஒருவர் வரவேற்புகமிட்டியார் அனுமதி பெற்று ஒரு அறிக்கையும் வெளியிட்டிருக்கிறார். ஆனால் கடைசியில் நடந்தது என்ன? எந்த நோக்கத்துக்காக மகாநாடு கூட்டப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறவே இல்லை. பார்ப்பனரை ஜஸ்டிஸ் கட்சியில் சேர்த்துக் கொள்ளக் காலம்வரவில்லை யென்ற தீர்மானத்தை திரு. கே. எ. பி. விசுவநாதம் விஷயாலோசனைக் கமிட்டியில் கொண்டுவந்த போது, அதை அனுமதிக்க முடியாதென்று தலைவர் ஸர். பாத்ரோ கூறிவிட்டாராம். அம்மட்டோ! திறந்த மகாநாட்டில் அந்தத் தீர்மானம் கொண்டுவரப் பட்டால் தாம் மகாநாட்டை விட்டு வெளியேறி விடுவதாயும் பயமுறுத்தினாராம். பார்ப்பனரல்லாதார் இபல்பாகவேசமாதானப் பிரியர்கள். வெளியேற்ற நாடகங்களிலும், கண்டன கோஷங்களிலும் பற்றில்லாதவர்கள். ஆகவே மகாநாட்டை சிர்குலைப்பதைவிட மானமாக நடத்தி முடிப்பதே கௌரவமென்றெண்ணி அந்தத் தீர்மானத்தை வற்புறுத்தாமல் கைநழுவவிட்டனர். தீர்மானத்தை திறந்த மகாநாட்டில் கொண்டுவந்தால் அது நிறைவேறிவிடும் என்ற அச்சத்தினாலேயே தலைவர் இவ்வளவு பிடிவாதமாக நடந்துகொண்டாரெனத் தெரிகிறது. பார்ப்பனரல்லாத இயக்கத்தின் உயிர்நாடியைப் பொறுத்த ஒரு விஷயத்தில் திருச்சி மகாஜனங்களின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க ஒரு சந்தர்ப்பம் அளிக்கப்படாமல் போனது மிகவும் கண்டிக்கத்தக்க செயலாகும். மந்திரிமாரான கனம் முனிசாமி நாயுடு, கனம் பி. டி. ராஜன் முதலியோரும், ஸர். கே. வி. ரெட்டி நாயுடுவும் பார்ப்பனரல்லாதாரை ஜஸ்டிஸ் கட்சியில் சேர்த்துக் கொள்ள விருப்பமுடையவர்களாகவே இருக்கிறார்களாம். ஜஸ்டிஸ் கட்சியில் பார்ப்பனருக்குப் பிரவேசனம் மறுப்பது அரசியல்முன்னேற்றத்துக்கு அடுத்ததல்லவென்றும், பார்ப்பன பகிஷ்காரம் கட்சிக்கே அவமானத்தை உண்டுபண்ணக்கூடியதாயிருக்கிறதென்றும் அவர்கள் சொல்லுகிறார்களாம். ஆனால் ஆதியிலேயே ஜஸ்டிஸ் கட்சியில் பார்ப்பனர்கள் சேர்க்கப்பட்டிருந்தால் தற்காலம் அகில இந்தியத் தலைவர்களாய்த் தோன்றியிருக்கும் பார்ப்பனரல்லாதார் தலைதூக்கியிருக்க முடியுமா என்று கேட்கிறோம். பார்ப்பனரல்லாதார் பேரைச் சொல்லி தற்கால பதவியை அடைந்த தலைவர்கள் பார்ப்பனரல்லாதார் என்ற பேரைச் சொல்வதே அவமானம் என்று கூறுவது வேடிக்கையாகவே இருக்கிறது. திருச்சி மகாநாட்டினால் பெரிய இலாபமுண்டாகவில்லையாயினும், பார்ப்பனரல்லாதார் கட்சியைக் குழிதோண்டிப் புதைக்க கட்சிப்பிரமுகர்கள் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பது புலனாகிவிட்டது. இந்தப் பிரச்சினையை மாகாண மகாநாட்டில் முடிவு செய்து கொள்ளலாம் என்று தலைவர்கள் சமாதானம் சொன்னார்களாம். கட்சித் தலைவர்கள் ஆதிக்கம் பெறாத ஜில்லா மகாநாட்டிலேயே அந்தத் தீர்மானம் கொண்டுவரமுடியாமல் ஆக்கப்பட்டு விட்டது. ஆகவே மாகாண மகாநாட்டில் அத்தீர்மானம் வெற்றி பெறுமென்று யாருக்காவது எதிர்பார்க்கமுடியுமா? எனவே பார்ப்பனரல்லாத கட்சிக்கு சாவுமணி அடிக்கப்பட்டுவிட்டது உறுதி. மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களைப்பற்றி விசேஷமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. சட்டசபை மெம்பர் திரு. வசுதேவ் தொழிலாளர் விஷயமாக வரவேற்புக் கமிட்டியாருக்கு அனுப்பிய கடிதத்தை மகாநாடு அலக்ஷியம் செய்து விட்டது ஒரு பெரிய குறைபாடேயாகும். தொழிலாளர் எல்லாம் பார்ப்பனரல்லாதாரே. தொழிலாளர் நிலைமை இப்பொழுது ஆபத்துக்கிடமானதாயிருக்கிறது. அநியாயமாக சிறைவாச தண்டனையனுபவிக்கும் தொழிலாளர் குடும்பங்கள் கண்ணீரும் கம்பலையுமாய் நாட்கழிக்கின்றன. மந்திரிகளும் நிருவாக சபை மெம்பர்களும் பார்ப்பனரல்லாதாராயிருந்தும் தொழிலாளர் துயரம் ஒழியவில்லை. தொழிலாளர் தலைவர்களில் ஒருவர் இவ்விஷயங்களை மகாநாட்டாருக்கு நினைப்பூட்டியிருந்தும், மகாநாட்டார் அவ்விஷயத்தை கவனிக்கவேஇல்லை. தலைவர்கள் கவனம்முழுதும் பார்ப்பனர்கள் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்த்துக்கொள்ளும் விஷயத்திலேயே பதிந்திருக்கின்றன. ஆகவே ஏழைத்தொழிலாளர்களை யார் கவனிக்கப் போகிறார்கள்?

இளைஞர் மகாநாடு வரவேற்புக் கழகத்தலைவர் திரு. டி. வி. சோமசுந்தரம் தமது தலைமைப் பிரசங்கத்தில் ஜஸ்டிஸ் கட்சி மேலும் பார்ப்பனரல்லாதார் கட்சியாகவே இருக்கவேண்டியதின் தேவையை நன்கு வற்புறுத்தியிருக்கிறார். ஜாதி ஒழியாமல் சமத்துவமோ, சுயராஜ்யமோ வரப்போவதில்லை யென்றும் எச்சரித்திருக்கிறார். தலைவர் ஸர். கே. வி. ரெட்டி இளைஞர்களுக்கு நேர்வழி காட்டாமல் இரட்டை யாட்சி வெற்றியையும், காங்கிரஸ் தோல்வியையும் பற்றி விரிவாகப் பேசியது பொருத்தமாகத் தோற்றவில்லை. தலைவர் ஸர். கே. வி. ரெட்டி எதிர்காலத்துக்குத் தேவையான ஒரு திட்டம் வகுப்பார் என்று வரவேற்புக் கழகத்தலைவர் திரு. டி. வி. சோமசுந்தரம் முன்னுடியே கூறினார். ஸர். கே. வி. ரெட்டியோ எதிர்கால வேலைத்திட்டத்தைப் பற்றி ஒன்றுமே கூறவில்லை. ஆகவே மகாநாடு கூடிப் பிரிந்தது என்பதைத் தவிர, பார்ப்பனரல்லாதார் முன்னேற்றத்துக்கு எதுவும் செய்ததாகக் காணப்படவில்லை. இந்நிலையில் நமது பிற்கால நிலை என்னவாகுமென்று பார்ப்பனரல்லாதார் கவலையுறுவது அநாவசியமாகாது.

---

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | 2—0—0 |
| பினங்கு „ | 1—10—0 |
| ஈப்போ „ | 1—12—0 |
| சென்னை „ | 0—2—0 |
| „ சித்திரைநடப்புவட்டி | 0—10—0 |
| ரங்கூன் | |
| „ சித்திரை நடப்புவட்டி | 0—8—0 |
| பவுன் | 17—13—0 |
| வெள்ளி 100 ரூ. எடை | 56—0—0 |

திருவிழா:—இவ்வூர் ஸ்ரீ கொப்புடையம்மன் திருவிழா 10—5—32 ந் தேதி செவ்வாய்கிழமை காப்புக்கட்டபெற்று விழா ஆரம்பமாகி நடைபெற்றுவருகிறது. கடந்த வருடங்களைப் போலவே இவ்வருடமும் சிறப்பாக அம்மன் சிங்காரிக்கப்பெற்று சதுர் கச்சேரி, மேளக்கச்சேரி முதலிய வைபங்களுடன் அதிக விமர்சையாக நடைபெறுமெனத்தெரிகிறது.

---

## விலகி நிற்கின்றனர்.

(திருச்சி நிருபர்)

சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளை வரையறுத்து ரிஜிஸ்டர் செய்ய முடியாமலிருப்பதாலும், தொண்டர்கள் முதலியோர் மனம்போனபடி இயக்கத்தின் பேரால் நடவடிக்கை நடத்திக் கொண்டு செல்வதாலும் தலைவர் R. K. ஷண்முகம் அவர்கள் வரும்வரை, விலகி நிற்பதாக யாகாண சுயமரியாதை நிர்வாகக்கமிட்டி மெம்பர்களான திரு. W. P. A. சௌந்திரபாண்டியன், V. V. ராமசாமி, சொ. முருகப்பா, T. V. சோமசுந்தரம் B. A. B. L., K. A. P. விசுவநாதம் ஆகியோர் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர்.

## புதுவயல்.

### பஞ்சாயத்து போர்டு மீட்டிங்.

(நமது நிருபர்) மே, 9—

பஞ்சாயத்து போர்டின் சாதாரணக்கூட்டம் ஒன்று 6-5-32உ யன்று மாலை 4-35 க்கு கூடியது. பிரஸிடெண்டுள்பட ஐந்து அங்கத்தினர்கள் ஆஜராகியிருந்தனர். ஜுன்மாதத்திலிருந்து மீ 1-க்கு ரூ. 26 விதம் குப்பை வண்டி கன்ட்ராக்ட் இபுறுகிம் கான் சாயபுவுக்கு விடுவதென்றும், சொக்கலிங்கமுதலியாரை ரெஸ்டோர் செய்ய வேண்டாமென்றும், சாக்கோட்டை வாராந்தர சந்தைக்கு வருடம் 1-க்கு ரூ. 92-4-0 வீதம் லைசென்ஸ் கொடுப்பதென்றும், கசாப்புகடை லைசென்ஸ் விஷயம் அடுத்த கூட்டத்தில் யோசிப்பதென்றும், பிள்ளையார் கோயில் ஊரணி மடப்பள்ளத்தில் ரோட்டுப்போடும் விஷயமாக ஜில்லா கலெக்டர் பார்வையிட்டு பழைய போஸ்ட்டாபீஸுக்கு எதிரிலிருக்கும் லைட் ஸ்தம்பத்துக்கு நேர் ரோட்டு போடலாமென்று ரிபோர்ட் செய்ததின் சம்பந்தமாய் அதற்குவேண்டிய நடவடிக்கைகளை பிரஸிடெண்டவர்கள் கவனிப்பதென்றும், ப. செ. பள. நாச்சியப்ப செட்டியார் தொழில்வரி சம்பந்தமாய், பிரஸிடெண்ட் விரோதத்தின் பேரில் வரியை வசூலிப்பதற்கு ஏதாவது நடவடிக்கை எடுத்தால், அதற்கு பிரஸிடெண்ட் பேரில் டாமேஜ்க்கு வழக்கு தொடரப்படும் என்று கொடுத்திருந்த வக்கீல் நோட்டீஸுக்கு ஏதாவது வழக்கு கொடுத்தால் எதிர்வாதம் செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டு தொழில்வரி அப்பீல்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. தொழில்வரி அப்பீல்களில் ஒரு சில அப்பீல்தார்களுக்கு மட்டும் வஜா செய்தும், அநேகர்களது அப்பீலைத் தள்ளியும், சில அப்பீல்களை அடுத்த கூட்டத்தில் யோசிப்ப தென்றும் முடிவு செய்யப்பட்டது.

---

## காரைக்குடி வெங்கிடாசலபதி விலாஸ் பந்தடிமால்.

ஆங்கிரஸ வருஷம் வைகாசிமீ 10உ (23-5-32) விளையாட்டு ஆரம்பிக்கப்படும். இதில் சேர விரும்புகிற ஒவ்வொரு (Team) ஜதையும், தங்கள் மனு சகிதம் பிரவேசக்கட்டணம் ரூபாய் ஒன்றும் ஆங்கிரஸஞு வைகாசிமீ 3உ (16-5-32) க்குள் சேர்ப்பிக்க வேண்டும்.

ஆங்கிரஸஞு வைகாசிமீ 4உ (17-5-32) மாலை 4 மணிக்கு பந்தடிமாலில் வந்திருப்பவர்கள் முன்னிலையில் பாலெட் பிரித்து இன்னாரும் இன்னாரும் விளையாட வேண்டுமென்று நிகழ்ச்சிமுறை யனுப்பப்படும்.

முடிவாக ஜெயிப்பவர்களுக்கு பெரிய வெள்ளிக் கப்பும், தோற்பவர்களுக்கு சிறிய வெள்ளிக்கப்பும் பரிசாக அளிக்கப்படும்.

இப்பரிசு விளையாட்டு விளையாடும் இடம் அ. ராம. வெ. காம்பவுண்டில் நடைபெறும்.

குறிப்பு:— இராமநாதபுரம் ஜில்லாவிலும், புதுக்கோட்டை ஸ்டேட்டிலும் உள்ள செட்டிநாட்டுக்குள் எந்த வகுப்பினரும் இதில் கலந்து கொள்ளலாம் என்று காரியதரிசி அ. ராம உ. நாராயணன் செட்டியார் அவர்கள் அறிவிக்கிறார்.

---

## சண்டமாருதம் நிறுத்தப் பட்டது.

திருச்சியிலிருந்து வெளியான "சண்டமாருதம்" தினப்பதிப்பு சித்திரை 27 தேதி திங்கட்கிழமையோடு நிறுத்தப்பட்டுவிட்டது.



## திருச்சி ஜில்லா பார்ப்பனரல்லாதார் மகாநாடு.

(நமது நிருபர்.)

மே, 7-ந் தேதி காலை திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் தலைவர்களும், கோயம்புத்தூர் மார்க்கமாக முதல் இரண்டாவது மந்திரிகளும், இன்னும் சில கனவான்களும், வந்துசேர்ந்தனர். மகாநாட்டுக் காரியதரிசிகளும் பலரும் வெகு குதூகலமாக ஆங்காங்கு சென்று வரவேற்று அழைத்துவந்தனர். காலை ஏழரை மணிக்கு டவுன் ஹாலிலிருந்து ஊர்வலம் பாண்டு வாத்தியங்களுடன் புறப்பட்டு பெரியகடைவீதி, சைனபஜார், மேலபுலிவார் ரோடு முதலிய வீதிகளின் வழியாக வந்தது. எண்ணற்கரிய ஜனங்கள் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். ரஸ்தாக்களில் ஜலந்தெளிக்கப்பட்டு, வெகு ரம்மியமாக விருந்தது. பல இடங்களில் வளைவுகள் கட்டியிருந்தனர். ஏராளமான மோட்டார்களில் தலைவர்களும் ஏனையோரும் வீற்றிருக்க, ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. சுமார் 1 மணி நேரம் ஊர்வலம் ஊர்ந்து, திருச்சி முனிசிபல் பப்ளிக் ஹாலை அடைந்தது.

மஹாநாட்டிற்கு ஏராளமான ஜனங்கள், திருச்சியிலிருந்தும் இன்னும் பல்வேறு ஊர்களிலிருந்தும் விஜயஞ் செய்திருந்தனர்.

மகாநாட்டுக்கு விஜயஞ் செய்தவர்களில் முக்கியமானவர்கள்:—

கனம் முதன் மந்திரி திவான்பகதூர் முனிஸாமி நாயுடு, கனம் இரண்டாம் மந்திரி பி. டி. ராஜன், செட்டிநாட்டுக் குமாரராஜா, சர். பாத்ரோ, சர். கே. வி. ரெட்டி., டப்ளியூ. பி. ஏ. சௌந்திர பாண்டியன், வி. வி. ராமசாமி, கோவை வெரிவாட செட்டியார், திவான்பகதூர் ரத்னசபாபதி முதலியார், ஏ. ஆர். சிவானந்தம், சாமி சிதம்பரனார், ராவ்பகதூர் ஏ. டி. பன்னீர்செல்வம், ராவ்பகதூர் டி. எம். நாராயணசாமி பிள்ளை, கே. ஸி. எம். வெங்கடாஜல ரெட்டியார், சேலம் சிவப்பெருமாள், பி. ஆர். தேவர், எஸ். முருகப்பா, மிஸஸ் முருகப்பா, மு. அ. அருணாசலஞ் செட்டியார், கே. ஏ. பி. விசுவநாதம், திரவியம்பிள்ளை, டி. ஏ. ஜி. ரத்னம் டி. பி. வேதாசலம், டி. வி. சோமசுந்தரம், ஜே. எஸ். ராமானுஜம், மிஸஸ் ராமானுஜம், கே. எம். பாலசுப்பிரமணியம், துறையூர் ராஜகோபால் பிள்ளை, மதுரை ரங்கசாமி நாயுடு, எம். எம். கிருஷ்ணசாமி பிள்ளை, முருகூர் ராமசாமி பிள்ளை, அரியலூர் வெங்கிடாஜலம் பிள்ளை, ஸ்ரீரங்கம் துரைசாமி, காமாச்சியா பிள்ளை, மாணிக்கம் பிள்ளை, சின்னசாமி உடையார், ராஜா சிதம்பரம், பூமிநாத பிள்ளை, நகர் ஆரோக்கிய சாமி, ரெங்கசாமி முதலியோர்.

திரிச்சி தென்னிந்திய நலஉரிமைச் சங்கத்தார் சர். பாத்ரோவுக்கும் சர். K. V. ரெட்டிக்கும் வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்தனர். முசிரி தாலுகாபோர்டு தலைவர் திரு. ராமசாமி பிள்ளை மகாநாட்டைத் திறந்து வைத்தார். வரவேற்புக் கழகத்தலைவர் மீனம்பள்ளி ஜமீன்தார் வரவேற்புப் பிரசங்கம் செய்தார்.

முதன் மந்திரி கனம் முனிசாமி நாயுடுகாரு சர். பாத்ரோவைத் தலைமை வகிக்கவேண்டு மென்று பிரேரேபித்தார். ராவ்பகதூர் A. T. பன்னீர்செல்வம், கோயமுத்தூர் ஜில்லா போர்டு பிரஸிடெண்டு திவான்பகதூர் C. S. ரத்தினசபாபதி முதலியார், எம். எம். கிருஷ்ணசாமிபிள்ளை, கே. ஏ. பி. விசுவநாதம், ரத்னம், தஞ்சை டாக்டர் டாஜாடின், ஸ்ரீமதி மரகதவல்லி அம்மாள் ஆகியவர்கள் ஆமோதித்தனர். சர். பாத்ரோ தலைமை வகித்துத் தமது தலைமைப் பிரசங்கத்தைச் செய்தார். இவ்வளவோடு காலை நடவடிக்கைகள் முடிந்தன.

பிற்பகல் 3 மணிக்கு இளைஞர் மகாநாடு ஆரம்பமாயிற்று. சென்னை எதிராஜ் நாயுடுகாரு கொடியேற்றினர். செட்டி நாட்டுக் குமார ராஜா முத்தையா செட்டியார் மகாநாட்டைத் திறந்து வைத்தார். வரவேற்புக்கழகத் தலைவர் திரு. T. V. சோமசுந்தரம் B. A. B. L., அவர்கள் தமது வரவேற்புப் பிரசங்கத்தைச் செய்தார்.

சர். K. V. ரெட்டியைத் தலைமை வகிக்கும்படி ஜில்லா போர்டு பிரசிடெண்டு ராவ்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளை M. A. B. L., அவர்கள் பிரேரேபித்தார்கள். திரு. சொ. முருகப்பா முதலியோர் ஆமோதித்தனர். தலைவர் ஆசனத்தமர்ந்து தமது பிரசங்கத்தைச் செய்தார்.

பின்னர் திவான்பகதூர் டி. வரதராஜுலு நாயுடுவின் மரணத்திற்காகவும், திரு அற்புதசாமி உடையார் அவர்கள் இறந்ததற்காகவும் அனுதாபத்தைக் காட்டும் இரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

"அன்பை ஆதரவாகக் கொண்ட இந்து சமயத்தைச் சேர்ந்த ஹிந்து கோவில்கள் எல்லா மக்களின் பொதுவுடமை ஆதலாலும், மனிதனுக்கு மனிதன் தாழ்ந்தவனல்லவென்று எல்லா வகுப்பினரையும் கோயில்களில் விடப்பட வேண்டுமென்றும் இம்மகாநாடு கருதுகிறது"

இத்தீர்மானம் திரு. ஜெ. எஸ். ராமானுஜம் கொண்டுவர, சிதம்பரநாதத்தால் ஆமோதிக்கப்பெற்று நிறைவேறியது.

"தேச முன்னேற்றத்திற்குப் பெருந்தடையாக உள்ளது ஜாதி பாகுபாடு ஆதலால், ஒவ்வொரு இளைஞரும், ஜாதி பேதத்தைப் போக்க முயலவேண்டுமென்று இம்மகாநாடு கோருகிறது."

இத்தீர்மானம் கோவை திரு. சிவானந்தம் அவர்களால் கொண்டு வரப்பட்டு, திரு எஸ். செல்வக் கணபதியாரால் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறியது.

"கோயில் பணங்கள் அனைத்தும். கைத்தொழிலுக்கும் கல்விக்கும் செலவு செய்யவேண்டு மென்று ஹிந்து தர்மபரிபாலன சபையையும் கோயில் அதிகாரிகளையும் இம்மகாநாடு கேட்டுக்கொள்கிறது."

கோதை திரு. வெரிவாட செட்டியாரால்பிரேரேபிக்கப்பட்டு திரு. விஸ்வநாதம் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறியது.

"ஆங்கிலேயர்களையும், அதிகாரிகளையும் அடிக்கடி சுட்டிக் கொல்லும் தீச்செயலால் நமது நாட்டின் சுயேச்சை பெறும் வழிக்குத் தடையாயிருப்பதால், நமது வாலிபர்களை அத்தகைய கெட்ட இயக்கத்தில் தலையிடாதிருக்குமாறு, இம்மகாநாடு அவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறது."

திரு. வெங்கடாசலம் பிள்ளையால் இத்தீர்மானம் கொண்டுவரப்பெற்று நிறைவேறியது.

"விதவைகள் கணக்கில்லாது வருத்தப்பட்டுக் கொண்டிருப்பது, இந்து பெண்களுக்கு சகிக்க முடியாத நஷ்டமாயிருப்பதால், பாலிய திக்கற்ற விதவைகளை, மணந்துகொள்ள நமது வாலிபர்கள் தைரியத்துடன் முன்வர வேண்டுமென்று இம் மகாநாடு கோருகிறது" இத்தீர்மானம்திரு. வாசுதேவனால் கொண்டு வரப்பட்டு, ஸ்ரீமதி மரகதவல்லி அம்மாள் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறியது.

பின்னர், தலைவர் தமது முடிவுரையில், வாலிபர்கள் காலந் தாழ்த்தப்படாதென்றும், அன்று முதலே அவர்கள் வேலை செய்ய புறப்பட வேண்டுமென்றும் மகாநாடு கூடுவதாலும், தீர்மானங்கள் நிறைவேற்றுவதாலும் பயனில்லை என்றும் நடைமுறையில் அவைகளைச் செய்து காட்டுவதே சாலச் சிறந்ததென்றும், ஒவ்வொரு வகை தொண்டிற்கும் ஒவ்வொரு தனிக் கமிட்டி ஏற்படுத்தி அதனதன் வேலைகளைச் செய்ய வேண்டுமென்றும், அடிக்கடி தலைவர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதவசியம் என்றும், மகாநாடு இனிது முடிந்ததற்குத் தான் மகிழ்வதாகவும் கூறிமுடித்தார்.

திரு. கே. எம். பால சுப்பிரமணியம் தலைவருக்கும், மந்திரிகளுக்கும், விஜயஞ் செய்துள்ள பல நண்பர்களுக்கும் வந்தனோபசாரஞ் செலுத்தி மகாநாடு இனிது முடிந்தது.

### இரண்டாம் நாள்.

8-ந் தேதி காலை 8-30-க்கு மகாநாடு கூடியது. பல தீர்மானங்கள் செய்யப்பட்டன. மாலை 3-30 முதல் சில தீர்மானங்கள் செய்யப்பட்டன.

"பார்ப்பனரைக் கட்சியில் சேர்த்துக்கொள்ளவேண்டிய அவசியமில்லை" யென்ற தீர்மானத்தை திரு. K. A. P. விஸ்வநாதம் கொண்டுவந்தார். மகாநாட்டில் பிரேரேபித்தால், தான்நாற்காலியைவிட்டு எழுந்துபோய்விடுவேனென்று தலைவர் சர். பாத்ரோ கண்டிப்பாகக் கூறிவிட்டார். விஷயாலோசனை கமிட்டியில் தீர்மானத்தை விவாதம் செய்வதற்கும் அனுமதிக்க முடியாதென்று தள்ளிவிட்டார். மாலையில் வந்தன உபசாரங்கள் கூறப்பட்டு 6-30-க்கு மகாநாடு முடிந்தது.

---

## இராமநாதபுரம் ஜில்லா போர்டுக் கூட்டம்

மே 7-ந்தேதி மாலை 4-30 மணிக்கு இராமநாதபுரம் ஜில்லா போர்டு ஆபீசில் திரு. டி. சி. சீனிவாசய்யங்கார் பி. ஏ. பி. எல். எம். எல். சி. அவர்கள் தலைமையின் கீழ் மேல்படி போர்டின் சாதாரண கூட்டம் கூடிற்று. அது சமயம் சுமார் 52 தீர்மானங்கள் வரை நிறைவேறின. முக்கியமாக கல்வி அபிவிர்த்திக்கான பல தீர்மானங்கள் ஏகமனதுடன் நிறைவேறியது குறிப்பிடத்தக்கதாகும்.

---

## பிஷாவாரில் 2000 பேர் விடுதலை.

சென்ற டிசம்பர்மாதம் கைதியானவர்களுள் சுமார் 2000 பேர்கள் இனி காங்கிரஸ் நடவடிக்கைகளில் கலந்துகொள்ளுவதில்லை என உறுதிமொழி கொடுத்ததின் மீது விடுதலையடைந்தனர். இன்னும் பலர் சீக்கிரம் விடுதலையடைவார்களென்று தெரிகிறது.

---

## சர்தார் வல்லவாய்க்கு நோட்டீஸ்.

### ஆசிரம நிலங்கள் பறிமுதல்.

கெய்ராஜில்லா போடல் கிராமத்திலுள்ள சுதந்திரயாஜ் ஆசிரமம், கூர்ஜர காங்கிரஸ் கமிட்டியைச் சேர்ந்ததாகும். ஷை ஆச்ரம நிலங்களுக்கு தீர்வை செலுத்தாததற்காக அந்நிலங்களை பறிமுதல் செய்து விட்டதாக, கூர்ஜர காங்கிரஸ் கமிட்டித் தலைவரென்ற முறையில், தற்போது சிறைவாச மனுபவித்து வரும் சர்தார் வல்லபாய் படேலுக்கு சர்க்கார் நோட்டீஸ் பிறப்பித்திருக்கின்றனர்.

## தந்திச் செய்தி.

ரங்கூன் மே, 11—

| | |
|---|---|
| படகு நெல் | 97-98 |
| ரயில்நெல் | 95-96 |
| பெரியமில்லரிசி ஸ்பெஷல் | 247-8-250 |
| நசீன் சிறியமில்லரிசி | 262-8-265 |
| நசீன் எஸ்.க்யூ. | 282-8-285 |
| மில்சார் புழுங்கல் | 210 270 |
| மீடோன் பஜார் | 265-270 |
| மீடோன் எஸ். க்யூ. | 285-287-8 |
| ரெடி. புழுங்கலரிசி | 270-280 |
| மில்சார் | 270-280 |
| பாதெலை | 266-275 |
| பவுன் | 17-8-0 |
| தவணை வட்டி | 0—7—6 |

---

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டினத்திலிருந்து பினங்கு, போர்ட்சு வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலான விடங்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| கப்பல் பெயர் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரோனு | 15—5—32 |
| ரஜுலா | 29—5—32 |
| ரோனு | 12—6—32 |

கப்பல்கள் பினங்கு, சிங்கப்பூர் முதலியவிடங்களிலிருந்து நாகப்பட்டினம்வந்துசேரும் விவரம்வருமாறு:—

| கப்பல் பெயர் | வருந்தேதி |
|---|---|
| ரஜுலா | 19—5—32 |
| ரோனு | 2—6—32 |

## தங்கம் வெள்ளி.

சென்னை, மே, 10—

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 28 | 0 | 0 |
| மூலா தோலா 1க்கு | 27 | 10 | 0 |
| சவரன் சில்லரை | 17 | 12 | 0 |
| வெள்ளி ரூ. 100 எடை | 56 | 8 | 0 |
| „ ரூ. 1 எடை | 0 | 9 | 6 |

---

## ரொக்கக் கடை.

ஆங்கிரசஞு சித்திரைமீ 26உ

| | |
|---|---|
| இம்பீரியல் பாங்க் வட்டி (1932 ஏப்ரல் 28 முதல்.) | 5% |
| பாங்க் ஆப் இங்கிலாந்து (1932 ஏப்ரல் 21 முதல்) | 3% |
| சிங்கப்பூர் வட்டம் விற்கும் விலை வெள்ளி 100-க்கு ரூ. | 156 |
| சிங்கப்பூர் வட்டம் வாங்கும் விலை வெள்ளி 100-க்கு ரூ. | 150 |

---

## மதுரை

### காங்கிரஸ் தொண்டர்களுக்குத் தண்டனை.

மே 6ந்தேதி கலெக்டர் ஆபீஸில் கோர்ட்டு உத்தியோகஸ்தர்களை தங்கள் வேலையிலிருந்து ராஜீநாமா செய்துவிட்டு காங்கிரஸில் சேர்ந்து கொள்ளும்படிக்கும் மற்றும் அன்னியத் துணிகளைப் பகிஷ்காரம் செய்யும் படிக்கும் துண்டுப்பிரசுரங்கள் வழங்கி வந்தேமாதரம் என்று சத்தம் போட்டு வந்துகொண்டிருந்த திருவாளர்கள் காளிமுத்துப்பிள்ளை, கன்னையா முதலியார், சச்சினந்தம் ஆகியவர்களைக்கைதுசெய்து 7-ந்தேதி ஜில்லா உதவி மாஜிஸ்திரேட் அவர்கள் முன்னிலையில் விசாரணை நடந்து முடிவில் அவசரசட்டப்படி தலா பதினெட்டு மாதக் காவல் தண்டனை விதிக்கப் பட்டார்கள்.

---

## மகாகவி தாகூர்.

### பாரசீகத்தில் பட்டமும் பதக்கமும்.

பாரசீகத்தின் தலைநகராகிய தெஹிரான் என்ற நகருக்கு கவிரவீந்திரநாத் தாகூர் விஜயம் செய்திருந்ததை ஜனங்கள் திருவிழா போல் கொண்டாடினர். அவர்களின் சந்தோஷத்திற்கு எல்லையில்லை: சர்க்கார், கவிஞருக்கு பட்டமொன்றும், பதக்கமொன்றும் அளித்தனர். கவி தாகூர் பாரசீகத்தைப்பற்றி புதிதாக செய்யுள் ஒன்றியற்றி வாசித்தார்.

## மலேயாவில் இந்தியர் நிலை.

### டாக்டர் லங்காசுந்தரம் அறிக்கை.

மலேயாவிலுள்ள இந்திய தொழிலாளர்கள் நிலைமையைப்பற்றி விசாரணைசெய்ய ஓர் கமிட்டி நியமிக்கவேண்டுமெனக் கூறி டாக்டர். லங்கா சுந்தரம் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார் அதன் சாரம் வருமாறு:—

மலேயாவில் நிலைமை மிகவும் கவலைக்கிடமாக இருக்கிறது. மலேயா ரப்பர் தோட்டங்களில் 5 லக்ஷம் இந்தியர்கள் வேலைபார்த்து வருகின்றனர். ரப்பர் விலை குறைந்து விட்டதால், மலேயா ரப்பர் தோட்டங்களில் வேலைசெய்யும் இந்திய தொழிலாளரை திருப்பி தாய் நாட்டிற்கு அனுப்பிவிட ஓர் திட்டம் தயாரித்து வருகிறார்களெனத் தெரிகிறது. ரப்பர் தோட்டதொழிலாளரில் 3000 இந்தியர்கள் ஏற்கனவே நாகப்பட்டணம் திரும்பி விட்டனர். மற்றும் 30,000 இந்தியர்களை சீக்கிரத்தில் இந்தியாவுக்கு அனுப்பிவிட பிரிட்டிஷ் இந்திய ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியார் அதிகக் கப்பல்களைவிட தீர்மானித்துள்ளனர்.

மலேயா இந்தியர்களின் நிலைமையை விசாரிப்பதற்காக சென்ற 1917-ம் வருஷம் திரு. மரக்காயரையும், சர். நார்மன் மர்ஷ் பாக்லையும் அனுப்பி வைத்தனர். பின்னர் மலேயா இந்தியர்களைப் பற்றி கவனிப்பாரே இல்லை. 1923ம் வருஷம் முதல் இந்திய சர்க்கார் ஏஜண்டொருவர் மலேயாவிலிருந்து இந்தியர்களின் நன்மையை கவனித்து வருகிறார். ஆனால் தற்போதோ நிலைமையில் பெரும் நெருக்கடியேற்பட்டுள்ளது. இந்திய தொழிலாளர்கள் தாங்களாகவே தாய்நாடு திருபுகின்றனரா? அன்றி நிர்ப்பந்தத்தின் மீது அவ்விதம் செய்கின்றனரா? என்பதைவிசாரணை செய்யவேண்டியது இந்திய சர்க்காரின் கடமையும்இந்திய மகாஜனங்களின்கடமையுமாகும்.

பொது ஜனங்களுக்கு நம்பிக்கையளிக்கத்தக்க பிரபலஸ்தர்களடங்கிய ஓர் தூது கோஷ்டியை மலேயாவுக்கு அனுப்பிவைத்து, தோட்டங்களில் இந்திய தொழிலாளரின் நிலைமை, இந்திய—சீன தொழிலாளர் போட்டி, தகரத் தொழில் அபிவிருத்தி, ஆண்-பெண்கள் எண்ணிக்கை முதலிய பல முக்கிய விஷயங்களை தீவிரமாக பரிசீலனை செய்ய வேண்டும்.

தென்னாப்பிரிக்கா இந்தியர்களை திருப்பி தாய் நாடனுப்பியதன் பலன்கள் பட்டவர்த்தன மாகிவிட்டன. எனவே மலேயாவிலிருந்து திரும்பும் இந்தியர்களின் கதியும் நிர்க்கதியாகிவிடுமென்பதை கேட்கவும் வேண்டுமோ? மலேயாவில் பரிதவிக்கும் 5 லக்ஷம் இந்தியர்களை பாதுகாக்க வேண்டியது இந்திய சர்க்காரின் கடமையாகும். இந்திய சர்க்கார் இதற்கு செவி சாய்ப்பார்களா?

## இந்தியா மந்திரியின் போக்கு.

### "குழப்பமும் தகராறும் விளைவிக்கும்"

சமீபத்தில் இந்தியா நிலைமையைப்பற்றி இந்தியா மந்திரி சர். சாமுவேல்ஹோர் பார்லிமெண்டில் செய்த பிரசங்கத்தைப் பற்றி "நியூ ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகை கூறுவதாவது:— சர். சாமுவேல்ஹோர் தமது பிரசங்கத்தில் கூறியுள்ள விஷயங்கள் சர்க்கார் அபிப்பிராயமாக இருக்கும் பட்சத்தில், எதிர்காலத்தில் குழப்பத்தையும், மகத்தான தகராறையும் தவிர வேறொன்றையும் நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. உண்மையில் அரசியல் சமாசம் ஏற்படும் விஷயத்தில் சர்க்கார் சிரத்தையுடனிருப்பார்களாகில், அவர்கள் செய்துள்ள தவறுகள் அவர்கள் சிரத்தையை பாழாக்கி யாதொரு பயனுமேற்படாதபடி செய்யக் கூடியவைகளாயிருக்கின்றன. தற்போதுள்ள நிலைமையில், சர். ஹோர் அளிக்கும் அரசியலை எந்த ஹிந்துவாவது ஒப்புக்கொள்ளுவார்களா? அல்லது அதைப்பற்றி விவாதிக்கத் தான் அவர்கள் இணங்குவார்களா? அவசரச் சட்டங்களால், பிரிட்டிஷார் மீது இந்தியர்களுக்குள்ள நல்லெண்ணம் நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. மகாத்மா காந்தியும் சிறையிலிருந்து கொண்டு இந்தியா முழுதும் அவசரச் சட்டங்களும் தாண்டவமாடி வரும் இச்சமயத்தில் ஏற்படும் எந்த அரசியல் திட்டமும் குப்பைக்கூடை காகித மாகிவிடுமென்பது நிச்சயம்.

### டாக்டர் பிரிவாட்டின் மறுப்பு.

சமீபத்தில் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் இந்திய மந்திரி பேசிய போது "இந்தியாவுக்கு சாதகமாக பிரிட்டனில் சிலர் பிரசாரஞ் செய்து வருகிறார்கள்" என்று குறிப்பிட்டார். அது சம்பந்தமாக டாக்டர் பிரிவாட் "டைம்ஸ்" பத்திரிகைக்கு எழுதியிருக்கும் மறுப்பொன்றில் குறிப்பிட்டிருப்பதாவது:—

இந்திய மந்திரி பார்லிமெண்டில் கூறிய வார்த்தைகள் என்னைக் குறிப்பிட்டதாக இருக்கலாம். ஆனால் அவர், இங்கிலாந்தின் உயிர்த் தோழராக விளங்கக்கூடிய இந்தியரிடம் அனுவசியமாக மரியாதையற்ற தனமாக நடந்து கொள்ளுகிறார்.

இந்தியாவுக்கு சாதகமாக எவரும் எதிர் பிரசாரம் செய்யவில்லை. இந்தியாவில் நடக்கும் விஷயங்களைப்பற்றி ஆதாரமற்ற தன்மையில் நான் எதுவும் கூறவில்லை. இந்தியாவில் உண்மையாக எது நடக்கிறதோ, அதையே நான் நேரில் கண்டு இங்கு கூறினேன். சர்க்கார் அடக்கு முறை கொள்கையும், கணக்கற்ற இந்தியர் கைதியாகி சிறையிலிருப்பதும், சாத்வீக மறியல் செய்யும் தொண்டர்களைக் கடுமையாக அடிப்பதோடு சுற்றி நின்று கொண்டிருக்கும் ஜனங்களையும் முரட்டுத் தனமாகப் போலீசார் தடிகளால் அடித்துக்கலைப்பதும், காங்கிரஸ் ஆஸ்பத்திரிகளை சர்க்கார் பலாத்காரமாக பூட்டியதும், இதுபோன்ற இன்னம் பல பலாத்காரச் செயல்கள் இந்தியாவிலுள்ள இதர இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் காங்கிரஸ் மீது அனுதாபத்தையும், ஆதாரவையும் தேடிக் கொடுக்கிறது.

பிரிட்டிஷார் எப்பொழுதும் நியாய புத்தியுடன் நடந்துகொள்ளக் கூடியவர்களென்பதை நான் மறுக்கவில்லை. இந்தியாவில் அஹிம்சை வழியில் செல்லுபவர்களிடம் பலாத்காரத்தை பிரயோகித்து அது பயனற்றதெனக் கண்டபின் அவர்களுடன் சமாசஞ் செய்துகொள்ளவேண்டிய காலம் சீக்கிரத்தில் ஏற்படக் கூடுமென நினைக்கிறேன். அக்காலத்தில் பிரிட்டிஷாரின் நிதானபுத்தியை நாம் யாவரும்கண்டு ஆச்சரியமடைவோமென்று நினைக்கிறேன்.

## காஷ்மீர் கிளர்ச்சி.

### சந்நியாசிகள் வெளியேற்றம்.

மே 8-ந்தேதி காஷ்மீர் சமஸ்தானத்தில் இதால்நாத், கத்லீச்வர் எனும் இடங்களில் ஏராளமான ஹிந்துக்களடங்கிய கூட்டங்கள் நடைபெற்றன. கூட்டத்தில் பலர் கைதியாயினர். கைதியானவர்களில் இரு சந்நியாசிகளை கலெக்டர் உத்தரவுபடி சமஸ்தானத்தைவிட்டு வெளியேற்றி விட்டனர்.

———

## ராஜாவின் ரிவால்வா[ர்]

### ரகஸ்யபோலீஸ் மன்னிப்[பு]

கிழக்கிந்திய ரயில்வேயைச் சேர்ந்த ...ர்பாக் ஸ்டேஷனில் மே. 2-ந்தேதி ... காலகங்கார் ராஜா ரயிலேற வந்திரு[ந்தார்] அவரை சுமார் 12 ரகசிய போ[லீசார்] பின் தொடர்ந்தனர். ராஜாவின் ...ப்பையிலிருந்து ஒரு ரிவால்வரின் ... வெளியே நீட்டிக்கொண்டிருந்தது. ... சாகிப் சிற்றுண்டிசாலைக்குள் செ[ன்று] சோடா சாப்பிடுகையில், ரகசிய போ[லீஸ்] சார்ஜெண்ட் மற்றும் இருவருடன் ...வை அணுகி ரிவால்வர் லைசென்[ஸ்] ...கே என்று கேட்டனர். உடனே ... சாகிப், தான் ஓர்தாலுக்தாரென்ற ... தச்சட்டம் தம்மை பாதிக்கா தெ[ன்று] கூறினர். உடனே சார்ஜெண்ட், ...விடம் மன்னிப்பு கேட்டுக்கொண்[டு] ...நத்துடன் திரும்பினர்.







## பொட்டுப்பொடி.

(கட்டெறும்பு.)

**வேலூர்**

சிறையில் தவங்கிடக்கும் தேசபக்தர்கள் அதிர்ஷ்டத்தை நினைக்கையில் நாக்கில் நீர் சொட்டுகிறது. மறியல் செய்தோ, உப்புக் காய்ச்சியோ, ஊர்வலம் சென்றோ, கொடியேற்ற விழா நடத்தியோ, தபால் பெட்டியில் நெருப்பிட்டோ சிறைபுகுந்தோமில்லையே என்ற ஏக்கம் உண்டாகிறது. தேசோத்தாரக நாகேசுவராவ் பந்துலு சமையல் வேலை செய்கிறாராம். சமையல் வேலை லேசான வேலையா? அது யாருக்குக் கிடைக்கும்? வீமன், நளன் முதலியோர் செய்த வேலையல்லவா? லக்ஷப்பிரபுவான நாகேசுவராவின் பாக்கியமே பாக்கியம். அவரது "அமிர்தாஞ்சனம்" இந்தியா முழுதும் பாவி ஏழை எளியோருக்கு சாந்தியளித்து வருகிறது. சிறைவாச காலத்து நமது தேசோத்தாரகர் ரசமான சாம்பார் பொடியோ, ரஸம் பொடியோ கண்டுபிடித்து இந்தியா முழுதும் பரப்பினால் பெரிய உபகாரமாயிருக்கும். கடல் உள்ளளவும் கடல் நீருள்ளளவும் வானுள்ளளவும் மலையுள்ளளவும் ஆறுள்ளளவும் அவனியுள்ளளவும் அவரது திருநாமமும் உலகத்திலே நிலைபெறும். இந்தியர்களும் ருசியான சத்தான உணவுண்டு ஆரோக்கியசாலிகளாய் வாழ்வார்கள்.

**நாகேசுரராவ் பந்துலு**

தமிழ், தெலுங்கு, மலையாளம் கன்னடம் ஆகியபாஷைகள் படிக்கிறாராம். அவர் பாஷையாராய்ச்சியில் இறங்கியது தென்னிந்தியாவின் அதிர்ஷ்டமென்றே சொல்லவேண்டும். தேசிய நோக்குடன் தோன்றும் தேசபாஷைப் பத்திரிகைகள் கடைசியில் சுயாலப் பத்திரிகைகளாய் மாறிவிடுகின்றன. எனவே பிரகாச பந்துலு தமிழ் மலையாளம் தெலுங்கு, கன்னட பாஷைகளில் "சுயராஜ்யா" வையும் வெளியிட்டால் தென்னாட்டில் வெகுவிரைவாக சுயராஜ்ய உணர்ச்சி தோன்றிவிடும். ஆகவே தேசபக்த நாகேசுராவ்பந்துலுவை நான் வாயார வாழ்த்துகிறேன். அவரது பாஷையாராய்ச்சி விரைவில் வெற்றியடைவதாக!

**சத்தியமூர்த்தி**

சாஸ்திரியார் அதிஷ்டந்தான் பெரிய அதிர்ஷ்டமாக இருக்கிறது. அவர் பாட்மிண்டன் விளையாட்டில்பொழுது போக்குகிறாராம். சிறையிலிருந்து வெளிவருமுன் பெரிய நிபுணராகி விடுவாராம், சட்டசபையில் கேள்விமேல் கேள்வி கேட்பதிலும் அவர் நிபுணர்; சுகுணவிலாச சபை ஆதரவில் நாடகமாடுவதிலும் அவர் நிபுணர்; ஜஸ்டிஸ் கட்சியாரைத் திட்டுவதிலும் அவர் நிபுணர்; பொதுக்கூட்டங்களில் கால்மடை திறந்தது போல் பிரசங்க மாரிபொழிவதிலும் அவர் நிபுணர். இப்பொழுது பாட்மிண்டன் விளையாட்டிலும் நிபுணராகப் போகிறாராம். அப்பாடா! என்ன அதிஷ்டம்.

**ஆனால்,**

நம்ப சக்கரவர்த்தி ஆச்சாரியார், பாஷ்யம் முதலியோர் என்ன செய்கிறார்களோ தெரியவில்லை. சக்கரவர்த்தி ஆச்சாரியார் மதுவிலக்குக் குறள்களும், கதைகளும் எழுதிக்கொண்டிருக்கிறாரோ என்னவோ? பாஷ்ய மய்யங்கார் ஒருகால் அடுத்த தேர்தலுக்கு விளம்பரங்கள் எழுதிக்கொண்டிருக்கலாம்!

**இவ்வாறு**

அய்யர்மார் பிரதாபங்கள்தான் வெளிவந்து கொண்டிருக்கின்றனவே யன்றி பிள்ளைமார், முதலிமார், நாயுடுமார், செட்டிமார், கௌண்டர்மார் பிரதாபங்களை வெளிவரக் காணோம். ஒரு வேலை "சூத்திரன்" சிறை வரலாறு வெளிவரக் கூடாதென் றுமனுஸ்மிருதி கூறுகிறதோ என்னவோ? மற்றவர் காரியந்தான் எப்படியானாலும் ஆகட்டும்.

**முத்துரங்க**

முதலியாரைப் பற்றியாவது இரண்டு வரி வெளிவரக்கூடாதா! அவர் என்ன சமானியரா? சென்னையில் கூடிய காங்கிரசுக்கு வரவேற்புக் கழகத் தலைவரல்லவா! மயிலை ஸ்ரீமான் பிரதமதளகர்த்தரல்லவா? பெரிய மிராசுதாரரல்லவா! சென்னை சட்டசபையில் மெம்பராயிருந்தவரல்லவா? திவான்பகதூர் ராமசாமி முதலியாரைத் தோற்கடித்த வீரரல்லவா? இவ்வளவு பெரிய ஒருவரைப்பற்றி ஒன்றுமே வெளிவராதது பெரிய அக்கிரமமென்றே சொல்வேன். அவரது மருமகன் பக்தவத்சலத்தைப்பற்றி ஒன்றும் சேட்கப்படாததும் பெரிய அநியாயந்தான். அவர்தான் அம்மான் நிழல்போலப் பின்பற்றிச்சென்றாரே! ஊர்வலம் நடத்திச்சென்றபோது நாலோ ஐந்தோ உதையும் பட்டாராமே! அவரை மதிக்காவிட்டாலும் அவர் பட்ட உதைக்காவது மதிப்புக்கொடுக்க வேண்டாமா? பத்திரிகை ரிப்போர்ட்டார்கள் என்ன செய்கிறார்கள். பிள்ளைமார், முதலிமார், நாயுடுமார் பெயர்தானே அவர்களுக்கு மறந்துபோய்விட்டது. தேசபக்தர் புராணம் எழுதினால் நல்ல விற்பனையாகுமே! மேலும்,

**அம்மாமார்**

பாய் மாரைப்பற்றியும் ஒன்றும் காணோம். இது பெண்ணுலகத்தை அவமதிப்பதாகாதா? இது தான் பெண்ணுலகத்தை கண்ணியம் செய்யும் முறையோ? தென்னாட்டு வீரர்கள் பேதைப்போல விழித்துக்கொண்டிருக்கையில் முதன் முதல் வெளி வந்து வேதாரண்யம் உப்புப்போரில் கலந்து சிறை புகுந்த ருக்மணி லக்ஷ்மிபதியை தென்னாடு மறக்கலாமா? சென்னைத் தலைவர்கள் மூலைமுடுக்குகளில் பதுங்கியிருந்தபோது உப்புசத்தியாக்கிரகிகளுக்குத் தலைமைவகித்து நடத்திய சகோதரி துர்காபாயை மறப்பது நன்றி கேடாகாதா? சுமார் ஒரு டஜன் குஞ்சு குட்டிகளையும் மறந்து சிறைபுகுந்த லக்ஷ்மியம்மாளைப் பாராட்டாதிருப்பது தர்மமாகுமா? யோக்கியமாகுமா? நீதியாகுமா? ஆகவே தேசியப் பத்திரிகைகள் இவர்களது புராணங்களை விரைவில் வெளியிடுமாக!

———

## மதிப்புரை.

### ஒரியண்டல் கவர்ன்மெண்டு செக்கூரிட்டிலைப் அஷூரன்ஸ் கம்பனி லிமிடெட்.

ஒரியண்டல் கவர்ன்மெண்டு செக்கூரிடி லைப் அஷூரன்ஸ் கம்பனியின் 1931 வருட அறிக்கை யொன்று கிடைக்கப் பெற்றோம். அதிலிருந்து அக்கம்பனி நன்றாகவும், வளர்ச்சியுடனும் தொழில் நடத்தி வருவதாகத் தெரிகிறது. ஏப்ரல் 20-ந் தேதி பம்பாயில் இக்கம்பனியின் 57வது வருஷ பூர்த்தி விழா நடைபெற்றிருக்கிறது. அதுகாலை வாசிக்கப்பட்ட கணக்கினுல் 1931 டிசம்பர் 31ந் தேதியோடு முடிந்த வருடத்தில் வந்தபாலிசிகள் 26,486 என்றும், அஷூர் செய்யப்பட்ட தொகை 5,34,60,954 என்றும், வருஷ பிரிமியம் 2915027-15-0 என்றும் பிறவும் அறியக் கிடக்கின்றன. ஒரு வருடத்தில் இவ்வளவு பெரிய தொகையைத் தொழில் நடத்துவதென்றால் உண்மையில் கம்பனிக்கு நல்லவருமானம் கிடைக்கின்ற தென்றும் பொதுஜனங்கள் அதனை ஆதரிக்கின்றார்களென்றுமே சொல்ல வேண்டும். இந்தச் செய்தியையும் இக்கம்பனி தொடங்கி 57 வருடங்களாகிவிட்டன வென்கின்ற விஷயத்தையும் கவனிக்குங் காலை ஜனங்கள் இதில் பங்கெடுத்துக்கொள்வதால் அதிக லாபமடையக்கூடுமென்று யூகிக்கவிடமிருக்கின்றது. இக்கம்பனியின் மேலும் வருஷ வருமானம் 245 லட்சம். வருஷா வருஷம் பாலிசிதாரர்கட்குக் கொடுக்கப்படும் தொகை 100 லட்சம். வருஷந்தோறும் கிடைக்கும் சராசரி லாபம். 39 லட்சம். மொத்த பண்டு 1131 லட்சம் என்று கேள்விப்படும் போது நமது யூகம்முற்றிலும் சரியென்றே சொல்லவேண்டும்.

### பர்மா கவர்னருக்கு ஆபத்து?

ஹெண்டர்சன் கப்பலில் வேலை செய்யும் மாலுமி முகமத் சுல்தான் என்பவர் ரங்கூன் கவர்னர் சட்ட சபைக்குச் சென்று விட்டுத் திரும்புங்காலத்தில், அவ்வழியில் ரிவால்வருடன் நின்று கொண்டிருந்ததாகக் குற்றம் சாட்டி கைதி செய்யப்பட்டு, அவன்மீது வழக்குத் தொடரப்பட்டது. அவ்வழக்கு ஜோடிக்கப்பட்டதென்ற அபிப்பிராயம் கொண்டு மாஜிஸ்திரேட் எதிரியை விடுதலை செய்தார்.

## விதவை மரணசாசனப் பொருள்.

சௌத், வீல்ஸ்-உள்ள ஒரு மனிதன் இறக்கும்போது அவனுடைய ஒரு நண்பனிடம் தன் மனைவியைப் பார்த்துக் கொள்ளும்படிக் கேட்டுக் கொண்டான். அந்த சிநேகிதன் அவவண்ணமே அந்த விதவையை சில நாள் பார்த்துவிட்டு இறுதியில் தனக்கு மரணகாலத்தில் விடப்பட்ட ஒரு சாசனப் பொருளாக மதித்து ஸ்வீகாரம் செய்து கொண்டான். அப்பால் இருவரும் புருஷனும் பெண்ணுமாக் 16 வருட மிருந்தார்கள். அவர்கட்கு ஒரு குழந்தையும் பிறந்தது. அவள் தனது புருஷனிறந்த பிறகு மாதா மாதம் 10 பவுன் பென்ஷன் (உபகாரச் சம்பளம்) பெற்றுவந்தாள். ஒரு தடவை அதனை வாங்கும்போது புகார் ஏற்பட்டு சர்க்கார் கொடுக்க மறுத்தார்கள். அதோடு அவள் இன்னொருவனின் மனைவியாக இருக்கின்றாளென்றும், அப்படியிருந்தால்முதல் கணவனின் பணம் செல்லாதென்றும் சொன்னார்கள். அதனைக்கேட்ட அப்பெண் "நான் அவருடைய வீட்டில் தங்கிவருகின்றேனே யல்லாது அவருடைய மனைவியாயிருந்து வரவில்லை. என் புதல்வனும் நானும் தனியாக வசிக்கின்றோம். நான் அவருக்கு இல்லாளாயிருக்கின்றே னென்பது உண்மைதான். அது அவருக்கு உதவி செய்யும் பொருட்டேதான். மேலும் எனக்கு உபகாரச் சம்பளவிதிகள் தெரியாது. ஆதலால் என்னை குற்றம் சொல்லாது பென்ஷனை தரவேண்டும்" என்றாள்.

கோர்ட்டார் அவளுடைய தப்பிதத்தை யுணர்ந்து 5 பவுன் அபராதம் விதித்தார்கள். அதனைக் கொடுக்கத் தவறினால் ஒருமாதம் சிறைத்தண்டனை யென்றும் உத்தரவிட்டார்கள்.



(2-ப்பக்கத் தொடர்ச்சி)

பாய்களைத் தலையில் கவிழ்த்துக் கொள்ளுமாம்.

மனிதன், தனக்குத் தோன்றும் எண்ணங்களை மற்றவனுக்குப் பேசித் தெரிவித்துக் கொள்ளுகிறான். இது போல மிருகங்களும் தமக்குதிக்கும் எண்ணங்களைப் பலவித நாதங்களால் தெரிவித்துக் கொள்ளுகின்றன. நாய்கள் பலவிதமாகக் குலைத்தும், குரங்குகள், முகத்தின் மாறுதல்களாலும் சப்பத்தாலும், அவைகள் நினைக்கும் சமாச்சாரங்களை அறிவிக்கின்றன. டார்வினும் பெல்லும் (Alexander Graham Bell) நாய்கள் பேசுவதை 10 மாதம் முதல் 12 மாதம் வரையுள்ள குழந்தைகள் பேசுவதற்குச் சமானமாகச் சொல்லுகிறார்கள்.

சார்லஸ் காட்டர் (Charles Cotter) தான் வளர்த்த (Colobus) குரங்குகள் பேசிக்கொள்வதைக் கவனித்து கூண்டுகளுக்கு அகப்படாமல் தாவிய குரங்குகள் புதிய குரங்குகளுக்குச் சப்தத்தால் அம்மார்க்கத்தைத் தெரிவித்துக் கொள்வதையும் பார்த்துக் குரங்குகள் பேசுந்தன்மை வாய்ந்தன என்று எழுதியிருக்கிறார்.

## லாகூர்-லண்டன் மோட்டார் பிரயாணம்

### போலீஸ் அதிகாரிகளின் தீரம்.

பஞ்சாப் போலீஸ் இலாகாவைச் சேர்ந்த இரண்டு அதிகாரிகள் கடந்த மாதம் முதல் தேதியன்று ஒரு மோட்டார்காரில் லாகூரை விட்டு லண்டனுக்குப் பிரயாணமாயினர். இந்த அதிகாரிகளின் பெயர் மெஸர்ஸ் எச். ஜே. ரஸெல் சே. டி. வாக்ஸ்டேப். தங்கள் ஊரிலிருந்து லண்டனுக்குக் காரிலேறி சவாரி செய்ய வேண்டுமென்ற அவா இவர்களுக்குப் பல வருஷங்களாகவே இருந்துவந்தது. ஆனால் இப்பொழுது தான் தங்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிவைக்க இவர்களுக்குச் சந்தர்ப்பமேற்பட்டது. ஐந்து வாரங்களில் தாங்கள் லண்டன் நகரை அடைந்து விட முடியுமென இவர்கள் ஒரு பத்திரிகை நிருபரிடம் அறிவித்தனர். இவர்கள் க்வெட்டா, டஸ்டாப், மெஷெட், பாக்டாட், துருக்கி தேசம், பால்கன் பிரதேசம் இவை வழியே சென்று, ஜெர்மனி தேசத்தை அடைந்து, அங்கிருந்து லண்டன் போய்ச் சேருவார்கள். இவ்வளவு நீண்ட யாத்திரையை முடித்துவைக்க இவர்கள் பொறுக்கி எடுத்துக்கொண்டுள்ள கார், ஒரு பார்டு. இந்தக் கார் இதற்கு முன்னரே நன்கு உழைத்து நல்ல பெயர் எடுத்திருக்கிறது.

## விளம்பரம்.

1932ஹு மேமீ 9உ இராமநதபுரம் ஜில்லா சிவகெங்கை ஜமீன் சொக்கநாதபுரம் அ.ப.ராம. ராமசாமிபிள்ளை பொது ஜனங்களுக்கு தெரிவிப்பது யாதெனில்:—

எனது இரண்டாவது குமாரன் முத்தையா பிள்ளை என்ற பசுபதி பிள்ளை சில காலமாக நல்நடத்தையில்லாமல் கெட்ட சகவாசங்களில் ஈடுபட்டும் குடும்பத்தில் எனக்குக்கட்டுப்படாமலும் இருப்பதால் ஷை பசுபதி பிள்ளைக்கு யாரேனும் நோட்டுக்கடனாவது தஸ்தவேஜ் முதலிய கடன்கள் கொடுத்திருந்தாலும் இனிக்கொடுத்தாலும் அவைகள் என்சுயார்ஜிதமான சொத்துக்களையாவது என்னையாவது கட்டுப்படுத்தாதென்றும் ஷையானுக்கு இதில் யாதொரு விதமான பாத்தியதையும் இல்லையென்றும் இதன்மூலமாக தெரிவிக்கிறேன். அப்படி மீறி யாரேனும் கடன் கொடுத்தால் நானாவது எனது சொத்துக்களாவது கட்டுப் படத்தக்கவையல்ல.

இப்படிக்கு
அப. ராமசாமிபிள்ளை
9—5—32.







## டிவாலரா வெற்றி.

### ராஜவிசுவாசப் பிரமாண ரத்து.

ராஜ விசுவாசப் பிரமாணத்தை ரத்து செய்ய வேண்டுமென அயர்லாந்து தலைவர் டிவாலரா கொண்டு வந்துள்ள மசோதாவிற்கு சாதகமாக 77 ஓட்டுகளும், பாதகமாக 67 ஓட்டுகளும் கிடைத்ததின் மீது அயர்லாந்து பார்லிமெண்டு கமிட்டியில் நிறைவேறியது.

### திருத்தம் தோல்வி.

அயர்லாந்து பார்லிமெண்டு அங்கத்தினர்களில் இஷ்டமுள்ளவர்கள் ராஜ விசுவாச பிரமாணம் செய்து கொள்ளலாமென டிவாலரா ராஜவிசுவாச பிரமாண ரத்து மசோதாவை யொட்டி எதிர்க் கட்சியினர்கொண்டு வந்த திருத்தத்தை இன்று அயர்லாந்து பார்லிமெண்டு கமிட்டியில ஓட்டுக்கு விட்டதில், அதற்கு சாதகமாக 53 ஓட்டுகளும் பாதகமாக 76 ஓட்டுகளும் கிடைத்ததின் மீது அது தோல்வியடைந்தது.

### "புதுவை முரசு" ஆசிரியருக்குத் தண்டனை.

#### மான நஷ்ட வழக்கு.

புதுச்சேரி, மே, 5—

இன்று காலை இவ்வூர் சிவில் கோர்ட் பிரசிடெண்டு புதுவையிலிருந்து வெளியாகும் தமிழ் வாரப்பத்திரிகையான "புதுவை முரசு" ஆசிரியர் திரு. சிவப்பிரகாசத்துக்கு அவ்வூர் மிஷன் பட்டுக்கோட்டை ரோமன்கத்தோலிக் மிஷன் பிரீஸ்டு ரெவரெண்டு ஜார்ஜ் பர்னெண்டஸ் என்பவரால் தொடரப்பட்டிருந்த மான நஷ்டவழக்கில் இரண்டு மாதத் தண்டனையும், 300பிராங்கு (ஓர் பிரஞ்சு நாணயம்) அபராதமும் கொடுக்கும்படி தீர்ப்புக்கூறினர்.

சென்ற சில வாரங்களுக்கு முன்னர் தஞ்சையில் வாதி பர்னெண்டஸ் மீது ஒரு ஸ்திரீயினால் தொடரப்பட்டிருந்த வழக்கு சம்பந்தமாக ஒரு செய்தி திராவிடன் பத்திரிகையில் பிரசுரமானதாகவும், அச்செய்தியை புதுவை முரசிலும் பிரசுரம் செய்து தலையங்கத்தில் அதைப்பற்றி விவரித்திருந்ததாகவும், அது சம்பந்தமாக திராவிடன் பத்திரிகை அந்தவியாசத்தை வாபீஸ்வாங்கிக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்டதாகவும் ஆனால் புதுவை முரசு அம்மாதிரி செய்ய முன்வரவில்லை யென்றும் இவ்வழக்கில் கூறப்படுகிறது.

இந்த விஷயம் சம்பந்தமாக இவ்வூர் பாதிரிமார்களில் மூவர் மேற்படி ஆசிரியர் மீது வேறு வழக்குத் தொடர்ந்ததாகவும் அதில் மேற்படி வியாசம் ரோமன் கத்தோலிக் பாதிரிசமூகத்தையே பாதிக்கிறதென்றும் வாதித்தார்கள், இந்த வழக்கில் பிரதிவாதிக்கு ஒரு மாதம் காவல்தண்டனையும், 200 பிராங்க் அபராதமும் வாதிகளுக்குத் தலா ரூ.100 அபராதமும் கொடுக்கவேண்டுமென்று தீர்ப்புக்கூறப்பட்டது. முதல்வழக்கில் வாதிக்கு ரூ.300மான நஷ்டம் கொடுக்கும்படி பிரதிவாதிக்கு உத்திரவிடப்பட்டது.

"லா ஆப் பிரஞ்சர்" படி. காவல் தண்டனை 5ஹு வரையில் அமலுக்கு வராமல் நிறுத்திவைக்கப்பட்டது.

### நிர்வாணக் கோஷ்டியார் ஊர்வலத்தில் சண்டை.

நிர்வாணக் கோஷ்டியாரில் சுமார் 200 பேர் கூட்டமாகப் புறப்பட்டு பாட்டுப் பாடிக்கொண்டு, தங்களுடைய குடியிருப்பு ஸ்தலத்திலிருந்து ஊர்வலமாக நகரத்தை நோக்கி மெதுவாய் நடந்து சென்றார்கள். போலீசார் அவர்களை வழிமறித்தார்கள். உடனே நிர்வாணிகளுக்கும், போலீசாருக்கும் சண்டைவுண்டாகி விட்டது. அவர்களில் 117 பேர்களைப் போலீசார் கைதி செய்தார்கள். நிர்வாணக்கோஷ்டியாருள் 15,000 பேர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு அவர்கள் கூட்டத்தின் சிறுபான்மையார் நடத்தை பிடிக்கவில்லை.

இக்கூட்டத்தார்கள் பிரிட்டிஷ் கொலம்பியாவில் அநேக பள்ளிக்கூடங்களை நாசமாக்கி வருகிறார்கள். இவர்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பக்கூடாது என்று ஆட்சேபிக்கிறார்கள். இத்தகைய அக்கிரமங்கள் செய்துவருகிறவர்களைக் காட்டிக் கொடுப்பவர்களுக்குப் பெருந்தொகை இனம் கொடுக்கப்படுகிறது.

## நடிகர் கிட்டப்பாவுக்கு ஆபத்து?

### நாடகமேடையில் திடுக்கிடும் சம்பவம்.

எப்ரல் 30-ந் தேதி கும்பகோணம்அரண்மனைத் தோட்டத்தில் நாடகக் கொட்டகையில் மிக்க பயங்கரமான குழப்பம் நடந்ததாகத் தெரிகிறது. தூக்கு தூக்கி என்ற நாடகம் திரு. கிட்டப்பாவால் நடிக்கப்படும் என்று குறிப்பிடப் பட்டிருந்தது. இந்நகரில் மேல்படியாருடைய நாடகம் 2,3 தடவைகள் நடந்திருக்கிறது. ஆனால் மூன்றாவது தடவை கலவரமும் குழப்பமும் நேரிட்டது என்று தெரிய வருகிறது. விசாரித்ததில் நாடக கொட்டகையில் அளவுக்கு அதிகமான டிக்கட்டை கொடுத்தனர் என்றும் அதற்கு மேல் டிக்கட்டை கொடுக்கமறுத்ததினால் குழப்பம் ஏற்பட்டு சோடாபாட்டில்களை எறிந்து குழப்பம் பலமாக நடந்ததென்றும், இதனால் ஸ்திரீகளும், குழந்தைகளும், ஆடவர்களும், நாடக மேடை மீது எறிவிட்டதனால் கூச்சலும் குழப்பமும் அதிகமாயிற்றென்றும், போலீசார் என்ன கஷ்டப்பட்டும் குழப்பத்தை அடக்க முடியாமல் கற்கள் சரமாரியாக கொட்டகையில் கொட்டப்பட்டன வென்றும் நடிகர் திரு. கிட்டப்பாவை ஜாக்கிரதையாகப் பந்தோபஸ்துடன் மோட்டாரில் வெளியேற்றப்படலாயிற் றென்றும் கூறப்படுகிறது. இனியாவது இதுபோன்ற கலவரங்கள் சம்பவிக்காமல் நாடகத்தை நடத்துவோரும் போலீஸாரும் வழி தேடுவது அவசியமாகும். ஏற்கனவே ஒரு நாடகத்தில் டிக்கட்டுகள் கொடுத்தும் இடமின்றி மறுத்ததினால் தடியடிக்கு ஜனங்கள் ஆளாக நேர்ந்தது.

போலீசார்களை நாடகக் கொட்டகை பில்விட மறுத்ததினால் கலகம் விளைந்ததென்று கூறப்படும் விஷயம் உண்மையாவென்று விசாரித்ததில் இந்த வதந்திக்கு ஆதாரமே கிடையா தென்றும் ஆனால் அளவுக்கு மிஞ்சிய கூட்டத்தை நாடகத்தை நடத்தும் மானேஜரும் சொந்தக்காரர்களும் விட்டதினாலேயே நிலைமை நெருக்கடியாக ஏற்பட்டதென்றும் இதைப்பற்றி ஒரு கேஸூம் போலீசார் தொடுத்திருக்கிறதாகவும் தெரிவிக்கப்படுகிறது.

### நாமக்கல் மாஜிஸ்திரேட் வீட்டில் வெடிகுண்டு

நாமக்கல் சப்மாஜிஸ்திரேட் வீட்டின் மீதுசென்றவார இரவில் ஒருவகை வெடிகுண்டு எறியப்பட்டது. அந்தகுண்டு வெடித்து சுற்றுபுரத்தில் அதிர்ச்சியை உண்டு பண்ணிற்று. ஆனால் யாரும் காயமடையவில்லை. இதே போன்று 2 மாதங்கட்கு முன்னர் ஒரு குண்டு சப் இன்ஸ்பெக்டர் வீட்டின் மீது குறிவைத்துஎறியப்பட்டது. ஆனால், அக்குண்டு தவறி அடுத்தவீட்டில் விழுந்து பலத்த சப்தத்துடன் வெடித்தது.

### பாஞ்சாலத்தில் 1,133 ராஜீயக் கைதிகள்.

5ந்தேதி பாஞ்சாலசட்டசபையில் திரு. ஜோதி பிரசாத் கேட்ட கேள்விக்குப் பதிலளிக்கையில் சர். ஹென்றி கிரெய்க் தெரிவித்தாவது;—

ஜனவரி முதல் இதுவரையில் சட்ட மறுப்பு சம்பந்தமாகக் கைதி செய்யப்பட்டவர்களின் தொகை 1133 இவர்களுள் 2பேர் ஏ, வகுப்பிலும், பி, வகுப்பிலும்வைக்கப்பட்டனர். 24பேர்சட்டமறுப்பு சம்பந்தமாகக் கைதியான பெண்கள் 87 பேர் இவர்களுள் 16 பேர் 'ஏ' வகுப்பிலும் 30 பேர் 'பி' வகுப்பிலும் 51 பேர் சி வகுப்பிலும் வைக்கப்பட்டனர்.

### சென்னை கார்பொரேஷன். சத்தியமூர்த்திக்குப் பதவி.

கார்பொரேஷன் அங்கத்தினராகவிருந்து சட்டமறுப்பு இயக்க சம்பந்தமாக சிறைவாசம் செய்துவரும் திரு. சத்தியமூர்த்தி கடந்த 3 மாதங்களாக சபைக்கு வாராததினால் சட்டப்படி அவருடைய அங்கத்தினர் பதவியை ரத்து செய்யப்பட வேண்டியதாகும். ஜஸ்டிஸ் கட்சி அங்கத்தினரான திரு. சக்கரை செட்டி, திரு. சத்தியமூர்த்தியை மீண்டும் அங்கத்தினர் பதவியில் அமைக்க வேண்டுமென 3உ இரவு கூடிய கூட்டத்தில் ஓர் தீர்மானம் கொண்டுவந்தார். அது ஆதரிக்கப்பட்டது.

# தனவைசிய இளைஞரும் வீண் செலவும்.

(பாரப்பந்தா தே. வீரப்பன்.)

உலகிலுள்ள பல நாடுகள் இன்று பல துறையில் முன்னேறியிருக்கின்றனவென்பது நாமறிந்த உண்மை. அந்நாட்டார் அர்த்தமற்ற மூடப் பழக்க வழக்கங்களை அறவே யொழித்து பிறர் குறைகூற இடமின்றி "நாகரிக"த்திலும் 'செல்வ' த்திலும் 'கீர்த்தி'யிலும் முன்னேறிச் சுதந்திர வீரர்களாய் வாழ்கின்றனர். முப்பத்தைந்துகோடி ஜனப்பெருக்க முள்ள நம்மிந்திய நாடு இற்றைக்கு என்னிலையடைந்துள்ளது? இந்தியர்களாகிய நாம் என்ன செய்கின்றோம்? என்பன போன்ற கேள்விகட்குதக்க விடை பகர முடியாது வாளாவிருக்கின்றோம். நாட்டின் க்ஷேமத்தைக்கருதி ஒரு சிலர் இன்று பாடுபட்டு உழைப்பினும், தமது ஆற்றில் கரைத்த புளியாகவிருக்கின்றதேயன்றி ஒற்றுமையுடன் ஒன்றைச்சாதிக்க வலிமையற்றிருக்கின்றோம். தென்னாட்டன்பர்களில் பலர் தங்கள் சொந்த வேலைகளையும்பணம் திரட்ட வேண்டியவழிகளையும் ஊர் வம்புகளையும் அரசாங்கத்தாரின் மூலம் கீர்த்தியடைய எண்ணி அளவிட வியலாதத்திரவியங்களைச் செலவிடுகின்றார்களேயன்றி நாட்டு மக்களிடை பாசம் பிடித்து அரித்துவரும் பாழும் பாமரத் தன்மையை விலக்கி முன்னேற்றுவிக்கக்காணோம் இதனுல் சொந்த வேலைகளையும் பணம் சம்பாதிக்க வேண்டியதையும் செய்ய வேண்டாமென்பது என்கருத்தல்ல, ஆனல் மக்கள் க்ஷேமத்தை முதலில் பேணினுல் மணமும் கீர்த்தியும் தானே வருமென்பதே. நாடுக்ஷேமமுறாவிடின்நாம் யாங்ஙனம் க்ஷேமமடைதல் கூடும்? நாம் உயிர் வாழ உணவு எவ்வளவு அவசியமோ அதுவே போல் நாட்டுமக்களடைய வேண்டிய முன்னேற்றத்திற்கு நமது உழைப்பு அவசியம்.

எனவே நாம் இங்கு ஒரு குறிப்பிட்ட சமூகமாய நமது "நாட்டுக்கோட்டை தனவைசியர்கள்" சமூகத்தின் வீண் ஆடம்பரச் செலவையும் அதையொழிக்க வேண்டிய அவசியத்தையும் ஆராய்வோம். தனவைசிய அன்பர்களே! இளைஞர்களே! நமது சமூகம் இவ்விருபதாம் நூற்றாண்டில் நாகரிக உலகில் பண நெருக்கடி அளவுமீறிய இச்சமயம் நாம் செய்யும் செலவு கணக்கிலடங்காததாகவிருக்கின்றது. நம் சமூகத்தில் பல "அறியாமை" எனும் பேய் குடிகொண்டு நம்மை பாழும் பாமரக்குழியில் வீழ்த்தி விட்டது. அதினின்றும் இன்னும் நாம் விடுதலையடைய முடியவில்லை. நம்மை பிராமணப் பாதைகள் அமுக்கி வருகின்றன. அதினின்றும் நாம் அஞ்சா வீரத்துடன் வெளிப்பட்டு எனைய மக்களையும் அவ்வழி புகவொட்டாது தடுத்து முன்னேற்றமடைய வேண்டும். அஃதின்றி மேலும் மேலும் அறியாமையை வளர்த்து யாண்டு நோக்கினும் "முன்னோர்கள் சென்ற வழியும" "அறியாமை" "பாமரத் தன்மை" பாழும் சாஸ்த்திரம்" "ஸ்மிருதி" "சுருதி" "வேதம்" "புராணம்" "ஆகமம்" "ராமயாணம்" போன்ற இன்னும் பல கற்பனைகளைத் தளையுமே நம்பி மோசம் போகலாகத் எண்ணுந்தோறும் எழுந்தோறும் கண்ணீருகுக்காதிருக்க முடியவில்லை. அரும்பாடு பட்டுச் சேர்த்த செல்வத்தை ஒன்றுக்கு முதவாத சோம்பேறிக் கூட்டங்களுக்காகச் செலவிட்டு அவர் காலடியில் வீழ்ந்து கும்பிட்டு மிக்க பக்தி விஸ்வாசத்துடன் அவரை வணங்குவதை நினைக்க என் மனம் பதைபதைக்கிறது. சொற்பமல்ல, நம் முன்னோர்கள்தான் அவர் சூதில் மாய்ந்து கணக்கிட வியலாத கோவில்களைக் கட்டுவித்தும் பற்பல கும்பாபிஷேகங்களைச் செய்வித்தும் பிராமணனுக்கு பலவித சௌகர்யங்கள் அதாவது வீடுகட்டி விடுதல் மாதம் தவறாது அவனுக்கு குடும்பச் செலவிற்குப் பணம் கல்யாணங்கள் எல்லாம் செய்வித்தனர். இது தவிர அச்சோம்பேறிக் கூட்டங்கட்கு சத்திரங்கள் வேறுகட்டி பணத்தைப் பாழ்படுத்தினரெனின் நாகரிக உலகில்—அறிவு ஆராய்ச்சி மலிந்த—இதுபோழ்து இளைஞர்களாய நாம் அவ்வழியிற் சென்று பணத்தை பாழ்செய்ய லாவேண்டும்? ஐயோ! ஒன்றிற்கும் பிரயோஜனமற்றவழியில்செலவிடுவது எவ்வளவு தூரம் அறியாமை என்பதை வாசகர்களே யூகித்தறிதல் நலம்.

ஒருவன் இவ்வுலகில் ஜெனித்த முதல் அவனிறக்கும் வரை நடைபெறுகின்ற நன்மை தீமை இரண்டிற்கும் பார்ப்பனன் வராத தண்டோ? அவனுக்கு பணம் கொடுக்காததுண்டோ? காலில்லா முடவனுக்கும் கண்ணில்லா குருடனுக்கும் கையில்லா நொண்டிக்கும் ஒரு சல்லியும் கொடுக்க விசையாத நாம் வாழைப்பழம் போன்ற அழகிய மேனியுடன் அங்கங் குறைவற்ற பிராமணனுக்கு பணத்தை அள்ளி இறைக்கவேண்டியது அவசியமென்ன? பிராமணனுக்கு கொடுக்காவிடில் வரும் நஷ்டமென்ன? அவர்கள் சமூகத்தவர்களிற் சிலர் அரசாங்க உத்தியோகத்திலிருக்கின்றார்களே அதுபோல் நம்நாட்டுப் பஞ்சாங்கப் பார்ப்பனர்கள் ஏன் உத்தியோகம் செய்ய வில்லை? இவைகளை எல்லாம் நாம் யோசிக்காது "கடவுள் கடவுள்" என அளப்பரிய செல்வத்தை தொலைத்து வருவது மிக மிக மூடத்தனமாகும். நமது ஏமாறும் சுபாவத்தைக் கண்டவர்கள் மேலும் ஏமாற்றி வருகிறார்கள் எனவே நாம் இனி நமது நாட்டில் ஆங்காங்கே கல்வியறிவற்று ஏழைமக்கள் தவிப்பனைத் துன்னி ஆங்காங்கு சொற்பச் செலவில் தர்மப் பாடசாலைகளை ஏற்படுத்தி ஜாதி வித்தியாசம் பாராட்டாது கல்வி போதித்து அவ்வேளைகளின் கண்களைத் திறந்து விடுதல் எவ்வளவு நன்மையும் புண்ணியமுமாகும்? அவ்வாறு செய்வதால் நம் நாட்டில் சோம்பேறிக் கூட்டங்களை யழித்ததுடன் நாட்டு மக்களின் அறியாமையை விலக்கிய பெரும் கியாதியும் நம் சமூகத்திற்கு ஏற்படும். இற்க நாம் இன்னமொரு முக்கியமான வீண் செலவை நம் சமூகத்திலிருந்து அகற்ற வேண்டும்.

வைசிய இளைஞர்களே! இளைஞர்களாய நம்மாலேயே நம் சமூகம் சீர்பெறவேண்டும். அஃதின்றி நாமும் சேர்ந்து நம் குடும்பத்தில் நடைபெறுகின்ற "புதுமை" "கார்த்திகைப்புதுமை" "திருவாதிரை" போன்ற சிறு விசேடங்களிலும் "கல்யாணம்" போன்ற பெரும் விசேடங்கட்குச் செலவிடும் ஆடம்பரமான வீண் செலவை அறவே யொழித்து சொற்பப் பணத்தை செலவிட்டு காரியம் முடித்தல் அவசியம். நமக்கு காரியம் பெரிதேயன்றி வீரியம் பெரிதன்று. எனவே நாம் செலவுகள் பலவற்றிலும் சிக்கனமாயிருக்க வேண்டியது அவசியம். நாம் லேவாதேவி செய்துவரும் நாடுகளில் இன்று நமக்கு பலவித கஷ்டங்கள் ஏற்பட்டிருப்பதுடன் ஒவ்வொரு பெரும் கடைகளிலும் பல சில்லுகட்சே மூடைப்படுகின்ற தெனின் இனியும் நாம் ஆடம்பரத்தை விரும்புதல் நகைப்பிற்கிடமேயாகும்.

வைசிய இளைஞர்களே! உடன்பிறவிய நம் சமூகம் ... பதை மறுமுறையும் ஞாபக மூட்டுகின்றேன். பணம் படைத்தவர்களென்ற கர்வத்தால் மேலும் மேலும் வீண் செலவிட்டு மதியிழக்க வேண்டாமெனக் கேட்டுக் கொள்கின்றேன். தனவைசியர்களை இழித்துக் கூறுவதாக எண்ணவேண்டாம். அஃது எனது கருத்தும் கொள்கையுமல்ல. ஆனல் நம் சமூகத்திலுள்ள குறைபாடுகளை நீக்கி உயரிய முறையில் சீர்திருத்தமுறச் செய்ய வேண்டுமென்பதே எனது அவா. கழிகளும் முட்களும் பெரும்பாறைகளும் நிறைந்தவழியிற் செல்வதைக் காட்டிலும் சுத்தமான ஒரு ரோட்டிற் செல்வது எவ்வளவு நன்மை. இளைஞர்களே! அவ்வழியிற் செல்ல முனையுங்கள். ஆடம்பரச் செலவை யகற்றுங்கள். வீண் விரையத்தை ஒழியுங்கள்!

---











மே 2-ந்தேதி கல்கத்தா ரோட்டரி கிளப்பில் நடந்த விருந்தின் போது "ராய்ட்டர்" "அசோஸியேடட்பிரஸ்" ஆசிரியரான மிஸ்டர் எச். ஜி. பிராங்ஸ் "பத்திரிகை நிருபர்களின் வேட்டையும் அவர்கள் செய்தி யறியும் தந்திரமும்" என்பதைப் பற்றி பேசியபோது தமது ஜீவியத்தில் நடந்த சில சம்பவங்களைக் குறிப்பிட்டதாவது:—

# நிருபரின் செய்தி வேட்டை.

## "ராய்ட்டர்" ஆசிரியரின் அனுபவம்.

பத்திரிகை நிருபர்களின் வேலை மகாகடினமான தென்பதை எவரும் மறுக்கமுடியாது. அவர்கள் ஜீவியத்தில் பல அனுபவங்களைப் பெற்றிருக்கலாம். நானும் எனது ஜீவியத்தில் சில அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். ஆனல் சில பேர்பெற்ற பத்திரிகை நிருபர்களைப் போல நான் அவ்வளவு அனுபவம் பெற்றவனெனக் கூறிவிடமுடியாது. எனினும் நான் இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, தெற்கு சமுத்திரத்தீவுகள், இந்தியா முதலிய இடங்களுக்கு பத்திரிகை நிருபராகச் சென்றிருக்கிறேன். நான் கண்ட பல சம்பவங்களையும், அடைந்த அனுபவங்களையும் இங்கு விவரமாய் எடுத்துக் கூற முடியாது எனினும் சில விஷயங்களை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

நான் சர்வ கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தபோது, நடந்த சில தவறுதலுக்காகப் போலீஸ் கோர்ட்டில் ஆஜராகி அபராதம் கொடுக்க நேர்ந்தது. இதுவே எனக்குப் பத்திரிகைத்தொழில் பிரியத்தை உண்டு பண்ணக் காரணமா யிருந்ததெனலாம். அதன்பின் திரு.லாயட்ஜியார்ஜ் ஒருநாள் பர்மிங்காம் நகர மண்டபத்தில் பேசிக்கொண்டிருந்தார். கூட்டத்தில் குழப்பம் உண்டாகிவிட்டது. திரு. லாயட் ஜியார்ஜ் தப்பிப் போவதற்கு மார்க்கமில்லை. உடனே அவர் ஒரு போலீஸ்காரன் ஆடை தரித்துத் தந்திரமாகக் கூட்டத்தை விட்டு வெளியேறினர். அவர் தப்பிச் செல்லுவதற்கு நானும் துணை யிருந்தேன். என்னல் கூட்டத்திற்குச் செல்ல முடியவில்லை. ஆகவே நான் ஒரு பத்திரிகை நிருபர்வி சிட்டிங்கார்டை எடுத்துக்கொண்டு கூட்டத்தினுள் சென்று திரு. லாயட் ஜியார்ஜையும் இன்னம் பலரையும் கூட்டத்திலிருந்து பத்திரமாகத் தப்பிப்போக ஏற்பாடு செய்தேன்.

சரித்திர சம்பந்தமாக சில ஆராய்ச்சி செய்யும் பொருட்டு நான் ஆஸ்திரேலியா சென்றிருந்தேன். ஆஸ்திரேலியாவின் உள் நாட்டுக்குச் சென்று ஆராய்ச்சிசெய்து வந்தபோது அங்கு காட்டினுள் முகாம் போட்டிருந்த சில சுதேசிகளின் குடிசைகளுக்கு முன் நானும் என்னுடன் வந்திருந்தவரும் முகாம் போட்டிருந்தோம். சுதேசிகள் முகாம் போட்டிருந்த இடத்தில் ஏராளமான அபாரிஜனல் என்னும் ஜாதியாரிருந்தார்கள். அன்று பொழுது விடியும் தருணத்தில் சுதேசிகள் சூரியனை நோக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சூரியனை அவ்வளவு ஆவலுடன் பார்ப்பதன் காரணத்தை அப்பொழுதுஎங்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனல் அன்று சூரியனைகருத்தமேகங்கள் மூடியிருந்ததால் சூரிய வெளிச்சம் அவ்வளவு பிரகாசமாயிருக்கவில்லை. நாங்களும் எங்கள் ஆராய்ச்சியை முடித்துவிட்டுத் திரும்பினேம். நகரம் வந்து சேர்ந்த பின்னரே அந்த சுதேசிகளின் வழக்கங்களை அறியவந்தோம். சூரியன் நல்ல பிரகாசமா யிருந்தால் அன்று தாங்கள் எதிர்ப்படும் வெள்ளையர்களைக் கடவுளே தங்களிடம் அனுப்பியதாகக் கருதி, அவர்களைப் பிடித்து உயிரோடு பலி கொடுத்து விடுவார்கள். நல்ல வேளையாக அன்று சூரியன் நன்ருகப் பிரகாசிக்கவில்லை. ஆகவே எங்களை கடவுள் அனுப்பிய சரியான பலிகளல்லவென சுதேசிகள் விட்டு விட்டனர். இன்னம் புது ஹெப்ரய்ட்ஸ் என்னுமிடத்திலுள்ள மனிதரைத்தின்னும் அரக்கர்களிடமும் எத்தனையோ கஷ்டங்களை அனுபவித் திருக்கிறேன். அவர்கள் வசிக்கும் தீவுக்குச் சென்று அவர்கள் ரகசிய நடனத்தை சினிமாப் படம் பிடித்துக் காட்டினேம். இது அவர்களுக்கு அதிகஆத்திரத்தை உண்டு பண்ணியது. அவர்கள் எங்களை வேலைசெய்யும் நோக்கத்துடன் துரத்திவந்தார்கள். நாங்கள் தெய்வாதீனமாக உயிர்பிழைத்தோம். மறுவருடம் அதே தீவுக்கு திரும்பிச் சென்று எங்களைத் துரத்திவந்த காட்டுமிராண்டிகளின் தலைவர்களைப் படம் பிடித்துக் காட்டினேம். அவர்கள் அப்படங்களைப் பார்க்க வெட்கமடைந்து ஒரு வாரமாக கொடிகளில் மறைந்து கொண்டார்கள்.

இது போன்று இந்தியாவிலும் நான் பல அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். செய்திகளை வேட்டையாடிக் கொண்டு வருவதென்றால் இலகுவான காரியமல்ல. பத்திரிகை நிருபர்களாயிருப்பவர்களுக்கும் பல சங்கடங்கள் உண்டாகின்றன. (தமிழ்நாடு)

---

(3 பக்கம் தொடர்ச்சி.)

கழன்று போயிருக்கின்றன. அதன் மேல் தான் என்னைக் கண்டால் நடுங்கத்தொடங்கியது.

நான்.—சரி. முதன் முதல் குதிரையை பிடித்தால்தானே பல்லைக் கழற்றமுடியும்?

அவன்:—அதற்கா சேள். நாடியைப்பிடித்துக்கொண்டால் அசையாது நிற்கும்.

இந்த சம்பாஷணை எனக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது.

நான் வீடு சென்றதும் குதிரையை பராமரிக்கத் தொடங்கினேன். என் தம்பி அதனை பாம்பெனமதித்து அருகிலும் போகாதிருந்தார். எனக்கும் அத்தகயசந்தர்ப்பங்கள் ஒன்றிரண்டு தடவை கிடைத்தன. அப்போதெல்லாம் நான் ஒரு கல்லை யெடுத்துக்கொண்டு போனேன். கல்லைக் கண்டதும் குதிரை ராமன் காலில் அனுமானை போல அடங்கிவிட்டது. என்வே பல்லைக் கழற்றுவது தான் சிறந்தமுறை யென்று தீர்மானித்துக் கொண்டேன்.

இப்படியிருக்க என் தாயாரை யொரு நாள் அது கடித்துவிட்டது, அவள் வெகுவாக அவதிப்பட்டு விட்டாள். ஆதலால் நான் கோப மூண்டு ஒருபல்லைக் கழற்றி விட்டேன்.

சுருக்கச் சொன்னல் குதிரை வாங்கி இப்போது 6 மாத மாயின. பணமில்லாததால் இன்னும் வண்டிவாங்க வில்லை, அதற்குள் குதிரையின் பல் 5 போயிற்று. இன்னும் ஒன்றோ இரண்டோ பற்கள்தான் எஞ்சியிருக்கின்றன. இந்தப் பல்லைக்கொண்டு எப்படி ஜீவிக்குமோ தெரியவில்லை.

இதோடு எனது சொந்த முறையில் பின்னங் கால்களையும் ஒழுங்கு படுத்தி விட்டேன். இப்போது குதிரை உதைப்பதேயில்லை. முடித்துக் கூறினல் குதிரை என்னைக் கண்டு அஞ்சப் பழகிக் கொண்டது. இதுவே எனக்குக் கிடைத்த லாபம்.

---

### விஷப்புகைக்குநிதி.

#### ருஷயாவில் ஏற்பாடு.

சோவியத் யுத்த விஷப்புகை மருந்து சங்கத்தின் பிரதம சபை 50 லட்சம் பொன்னுக்கு லாட்டரி டிக்கட்டுகள் வெளியிட்டுள்ளது. டிக்கெட்டுகளை யெல்லாம் விற்பனை புரிந்து சேரும் மொத்த தொகையில் 10 லட்சம் பொன்வரையில் டிக்கட்டு வாங்கியவர்களுக்கு பரிசாக கொடுத்து விட்டு, மிச்சம் 40 லட்சம் பொன்னை விஷப்புகைபோன்ற இதர மருந்துகள் தயாரிக்க எடுத்துக்கொள்வர். லாட்டரி டிக்கட்டுகளை தபால் ஆபீஸ்களில் விற்பனை புரிந்து வருகின்றனர். சோவியத் யுத்த விஷப் புகை சங்கத்தில் 1 கோடி 20 லட்சம் அங்கத்தினர்களிருக்கின்றனர். அவர்களில் 20 லட்சம் பேர் பெண்களாம்.

---

### போஸ் குடும்பம்.

#### சர்க்கார் உதவி.

வங்காள ஆர்டினன்ஸ் சட்டப்படி சிறைவாசம் செய்யும் திரு. எஸ். வி. போஸ் குடும்பத்துக்கு மாதம் 1200 ரூபாயும், அவரது லைப் இன்ஷியூரன்ஸ் கட்டணம் வகைக்கு 18,000 ரூபாயும் கொடுக்க இந்திய சர்க்கார் அனுமதி யளித்திருப்பதாய் கல்கத்தா "அட்வான்ஸ்" பத்திரிகை கூறுகிறது.

# நீரழிவுக்குக் கைகண்ட மருந்து

## பழனி R. M. K. அப்ரேக் செந்தூரம்.

ரிஜிஸ்டர்



டிரேட் மார்க்

இதோ! ஒரு மருந்துக்கும் வசப்படாத வியாதி இந்த மருந்தில் தீருவது ஆச்சரியமாயிருக்கிறது. இப்படிசிரே ஷ்டமானமருந்து இதுவரை வெளிவரவில்லை. எந்த மருந்திலும்தீராத வியாதிகள்இதில் அவசியம் தீரும். நீரழிவினால் ஜாஸ்தி போகும் நீரை நிறுத்தும், தாகத்தைக்குறைக்கும். நாட்பட்ட அஸ்தி வெட்டை நீரோடு இந்திரியம் உடைந்து முதல், ஈ, எறும்பு மொய்த்தல், நாவரட்சி, மலபந்தம், உடம்பெரிவு, வெள்ளை,கடுப்பு, எரிச்சல் முதலிய சகலவித கர்மவியாதிகளையும் கண்டிப்பாய் நிவர்த்தியாக்கும். நீரிலுள்ள சர்க்கரையைக் குறைத்து சரீர வெளுப்பும் மாற்றி தேஜஸ் பலம் கொடுக்கும். நீரழிவால் வரும் பிளவை, ரணங்களை ஆற்றும். பசி தீபனங்களை உண்டாக்கும். ஜீவாதார நரம்புகளை முறுக்கேற்றி தாதுபுஷ்டியைக் கொடுக்கும். 40 நாள் மருந்து 40 ரூபா. அனுபானம்10 ரூபா ஆக ரூபா 50. 20 நாளைக்கு ரூபா 25. ஏழைகளுக்குப் பாதி விலை.

### நற்சாக்ஷி.

நான் நீரழிவினால் அதிக உபத்திரவப் பட்டுக்கொண்டிருந்தேன். ஒரு வேளைக்கு அரைக்கால்படி வீதம் நாள் ஒன்றுக்கு 30 அல்லது 35 தரம் நீர் போய்க்கொண்டிருந்தது. அதிகப் பசியும் தாகமும் ஏராளமாயிருந்தது. தங்களுடைய அப்ரேக் செந்தூரத்தை வெண்ணெயில் 15 நாள் சாப்பிட்டேன். என் வியாதி பூராவும் சொஸ்தமாகிவிட்டது. நீர் சாதாரணமாய்ப் போகிறது. பசி தாகம் இயற்கை நிலைக்கு வந்துவிட்டது. சரீரத்தி லுள்ள கருக்கமெல்லாம் நீங்கி, நல்ல ரெத்தம் உண்டாகி, சரீரம் நல்ல தேஜஸ் அடைந்துவிட்டது. சித்த ஆயுர்வேத வைத்திய விஷயமாய்த் தாங்கள் எடுத்துக்கொள்ளும் சிரத்தையானது மென்மேலும் விருத்தியாகி பொது ஜனங்களுக்கு பேருதவி யாவீர்களென்று சதா ஈஸ்வரனைப் பிரார்த் தித்துக்கொண்டிருக்கிறேன்:

ராமசாமி அய்யர், முனிசிபல் ஹைஸ்கூல், தமிழ் பண்டிட் பழனி.

## நீரழிவில் கிருமியுண்டான நிலைமையிலும்கூட நமது அப்ரேக் செந்தூரம் சொஸ்தம் செய்திருப்பதைக் கவனியுங்கள்.

தங்களுடைய அப்ரேக் செந்தூரம் சாப்பிட்டதில் தடவை 1-க்கு சின்னப்படியால் ஒரு படி வீதம் பகலில் 10 தடவையும், இரவில் 6 தடவையும் நீர் போனது இப்பொழுது நின்றுவிட்டது. ஒரே இடத்தில் 4 தடவை ஒண்ணுக்கு இருந்தால் அந்த இடத்தில் மஞ்சள் நிறமாகவும் தோசை மாவுமாதிரி உப்பிப் பொதபொதவென்று இருந்தது. இப்பொழுது கிடையாது. அதை குச்சியால் கிளரினால் அதில் மஞ்சள்நிறமான புழுக் கள் இருந்தது. அதுவும் இப்பொழுது கிடையாது. எனக்கிருந்த தாகமோ சொல்லமுடியாது. நாள் ஒன்றுக்கு 30 சேருக்குக் குறையாமல் தாகத்துக் குச் சாப்பிட்டேன். இப்பொழுது தாகம் பூராவும் நின்றுவிட்டது. ஆகையால் தாங்கள் எனக்கு அனுப்பிய அப்ரேக் செந்தூரத்தை 60 நாள் சாப் பிட்டு எனக்கிருந்த நீரழிவு ரோகம் பூராவும் சொஸ்தமாகிவிட்டது.. ஆகையால் ஆயுசுள்ள அளவும் தங்களை மறக்கமாட்டேன். என்றும் நீடித்தநாள் ஆயுளோடு பூமியிலிருந்து என்னைப்போலுள்ள ஏழைகளுக்கு உபகாரம் செய்துகொண்டிருக்கும்படி கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

(Sd) வை. ரெத்தினம்பிள்ளை, நெல் வியாபாரம், வேட்டேக்காரத் தெருவு, தஞ்சாவூர். 5—12—26

# இருமல் இளைப்பு தீர்ந்துவிட்டது.

## பழனி ஆர். எம். கே. தாளகபற்பம் சாப்பிடுங்கள்.

### இருமலுக்கு கைகண்ட மருந்து.

எவ்வளவு நாட்பட்ட காசம், க்ஷயம், ஈளை, இருமல், இளைப்பு, கஷ்ட சுவாசம், கோழை, கபக்கட்டு, பீனிசம் இருந்தாலும் சரி இதில் அவசியம் தீரும்.

பித்தநீர் சிரசுக்கேறி கபாலம் கோதித்தே 8 வித பீனிச ரோகம் வருகிறது. பீனிச ரோகம் முத்தியே காசம் 8-ம் க்ஷயம் 8-ம், இருமல் 16-ம் இளைப்பும் வருகிறது.

நீங்கள் இருமலினால் என்ன கஷ்டப்பட்டாலும் சரி! எத்தனை யோ மருந்துகள் சாப்பிட்டு இருமல் தீராதிருந்தாலும் சரி; உங்கள் இரு மலை 6 நாளில் கண்டிப்பாய் நிறுத்திவிடும்; அது எத்தனை வருஷத்திய ரோகமானாலும்சரி பறந்துவிடும். சீதளம், மழை பனிகாலங்களில் வரும் ஈளை, இருமல், இரைப்பு, இளைப்பு, மந்தார காசம், ரத்தகாசம், கஷ்ட சுவாசம், கோழை, கபக்கட்டு, அதனால் மார்பு வலி, விலாவலி, முள்ளந் தண்டு வலி, சிலுப்ப் பினிசம்; மூக்கில் ஜலம் ஒழுகுதல், தும்மல் வயி றுப்பிசப், தலைவலி, காது குடைதல், ஜுரம், மூச்சு திணறுதல், நெஞ் சில் தொண்டையில் கர்முர் என்ற சப்தம், பூனைபோல் கத்துதல், கூவு தல், துரைசுரல் தாபனம் முதலியவை இதில் அவசியம் தீரும். அனுப வத்தில் கைகண்ட மகா அருமையான மருந்து 20 நாள் தாளக பற்பம் அனுபானம். தாளிசப்பத்திரி சூரணத்துடன் விலை ரூபா 25.

ஏழைகளுக்கு ரூபா 12—8—0.

### சர்டிபிகேட்

### நான் பட்ட கஷ்டத்திற்கு அளவேயில்லை.

அன்பு மறவாத ஐயா R. M. K. வேலுசாமி பிள்ளை, டாக்டர் அவர் களுக்கு சிங்கப்பூர் ஹாஜிலேயில் 48 நெ. தொப்பிக்கடை செ. அப்துல் ஹமீது எழுதுவது:—

26-1-27-ல் தாங்கள் அனுப்பிய தாளக பஸ்பம் 6- நாள் சாப்பிட்டு 7-வது நாள் தலை முழுக இருமலும், கஷ்ட சுவாசமும் நிவர்த்தியாய்விட் டது. இரண்டு வருஷம் நான் பட்ட கஷ்டத்துக்கு அளவேயில்லை. தங்க ளுடைய தாளக பஸ்பத்தால் என்வியாதி சொஸ்தமானபடியால் என்மனம் ஆனந்தமடைகிறது. இந்த தாக்கல் எழுத வெகுநாள் சென்றுவிட்டதைப் பற்றி மன வருத்தப்படவேண்டாம்: என் சினேகிதர் ஒருவருக்கு இரண்டு வருஷமாய் இருமலும், கஷ்ட சுவாசமும் இருப்பதால் 20 நாள் சாப்பிடக் கூடிய தாளக பஸ்பம் V. P. யில் அனுப்பக்கோருகிறேன்.

(Sd) செ. அப்துல் ஹமீது, சிங்கப்பூர். 6-12-28.

### 20-வருஷத்திய இருமல் இளைப்பு சுகம்.

எனது தகப்பனருக்கு இருமல் இளைப்பு 20 வருஷமாயிருந்தது, தங்கள் தாம்பர பஸ்பமும், தாளக பஸ்பமும் சாப்பிட்டு பூரா சொஸ்த மடைந்துவிட்டது. எங்களூரில் அழுகிக்கிடந்த குஷ்டரோகியும், தங்கள் தாம்பர பஸ்பம் சாப்பிட்டு பூரா சொஸ்தமடைந்ததையும் நான் நேரில் பார்த்திருக்கிறேன். ஆகையால் என் வியாதிக்கும் மருந்து வாங்கிச் சாப் பிட நேரில் வந்தேன்.

ந. நா. இ. முகம்மது காசீம்,
புதூர், இளையாங்குடி P. O. 2—12—28.

வைத்திய ஆசிரியர்,

# R. M. K. வேலுசாமி பிள்ளை,

சித்த வைத்தியசாலை, பழனி. (PALNI)

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi.

